𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍇𑌵 𑌤𑌦𑍍𑌭𑌾𑌵𑌯𑌤𑍍𑌯𑍇𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌸𑌨𑍍𑌤𑌤𑍍𑌯𑌾 𑌏𑌵𑌂 𑌸𑌨𑍍𑌤𑌤𑌾 𑌹𑍀𑌮𑍇 𑌲𑍋𑌕𑌾𑌸𑍍𑌤𑌦𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌜𑌨𑍍𑌮 ॥

𑌸𑌾 𑌭𑌾𑌵𑌯𑌿𑌤𑍍𑌰𑍀 𑌵𑌰𑍍𑌧𑌯𑌿𑌤𑍍𑌰𑍀 𑌭𑌰𑍍𑌤𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑌨𑍋 𑌗𑌰𑍍𑌭𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌵𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌾 𑌰𑌕𑍍𑌷𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌾 𑌚 𑌭𑌰𑍍𑌤𑍍𑌰𑌾 𑌭𑌵𑌤𑌿 । 𑌨 𑌹𑌿 𑌉𑌪𑌕𑌾𑌰𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍁𑌪𑌕𑌾𑌰𑌮𑍍 𑌅𑌨𑍍𑌤𑌰𑍇𑌣 𑌲𑍋𑌕𑍇 𑌕𑌸𑍍𑌯𑌚𑌿𑌤𑍍 𑌕𑍇𑌨𑌚𑌿𑌤𑍍 𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧 𑌉𑌪𑌪𑌦𑍍𑌯𑌤𑍇 । 𑌤𑌂 𑌗𑌰𑍍𑌭𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇𑌨 𑌗𑌰𑍍𑌭𑌧𑌾𑌰𑌣𑌵𑌿𑌧𑌾𑌨𑍇𑌨 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌧𑌾𑌰𑌯𑌤𑌿 । 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌪𑍍𑌰𑌾𑌗𑍍𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 𑌸 𑌪𑌿𑌤𑌾 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌏𑌵 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 𑌏𑌵 𑌜𑌾𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 𑌅𑌧𑌿 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 𑌜𑌾𑌤𑌂 𑌕𑍁𑌮𑌾𑌰𑌂 𑌜𑌾𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌨𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 । 𑌸 𑌪𑌿𑌤𑌾 𑌯𑌤𑍍 𑌯𑌦𑌾 𑌕𑍁𑌮𑌾𑌰𑌂 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 𑌅𑌧𑌿 𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌮𑍍 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌜𑌾𑌤𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑍍 𑌏𑌵 𑌜𑌾𑌤𑌕𑌰𑍍𑌮𑌾𑌦𑌿𑌨𑌾 𑌯𑌤𑍍 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 𑌤𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌮𑍍 𑌏𑌵 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 ; 𑌪𑌿𑌤𑍁𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌏𑌵 𑌹𑌿 𑌪𑍁𑌤𑍍𑌰𑌰𑍂𑌪𑍇𑌣 𑌜𑌾𑌯𑌤𑍇 । 𑌤𑌥𑌾 𑌹𑌿 𑌉𑌕𑍍𑌤𑌂 “𑌪𑌤𑌿-

---

ர்ச்சிக்காக; ஏனெனில், இவ்வுலகங்கள் இவ்வாறு தொடர்ந்து வருகின்றன, அது அதற்கு இரண்டாம் பிறப்பு.

*கர்ப்பமாகிய கணவனது ஆத்மாவை வளர்க்கின்ற அவளும் கணவனால் வளர்க்கவேண்டியவளாம், காப்பாற்றவேண்டியவளாம்; உலகிலே உதவி எதிருதவி இல்லாது ஒருவனுக்கு ஒருவனோடு உறவு அமைதல் இல்லையாதலின். ஸ்திரீயானவள் கர்ப்பத்தைச் சுமந்து வளர்க்கவேண்டிய கீழ்க்கூறிய முறைப்படி அந்த கர்ப்பத்தைச் சுமந்து வளர்க்கிறாள். தகப்பன் (அதனது) பிறப்பிற்கு முன்னும், பிறக்கும்பொழுதும் (அதனை வளர்க்கிறான்; பிறப்பிற்கு முந்தி ஸீமந்தம்முதலியவற்றாலும், பிறக்கும்பொழுது எளிதில் வெளிவரும்பொருட்டு மந்திரஜலப்ரோக்ஷணம் முதலியவற்றாலும் வளர்க்கிறான்.—ஆ.) பிறந்தபின்பும் தகப்பன் குழந்தையை ஜாதகர்மம் முதலியவற்றால் வளர்க்கிறான். பிறக்கும்பொழுதும் பிறந்தபின்பும் ஜாதகர்மம்முதலியவற்றால் தகப்பன் குழந்தையை வளர்க்கின்றமையால், தன்னையே வளர்க்கிறான் என்க; ஏனெனில், தகப்பனது ஆத்மாவேயன்றோ [உடம்பேயன்றோ] புத்ரவடிவமாகப் பிறக்கின்றது. அவ்வண்ணமே, “கணவன் மனைவியைப் புகு*

𑌜𑌾𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 । 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌿𑌮𑌰𑍍𑌥𑌂 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌤𑍍𑌮𑌨𑌾 𑌜𑌨𑌯𑌿𑌤𑍍𑌵𑌾 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿? 𑌇𑌤𑌿 । 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇— 𑌏𑌷𑌾𑌂 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 𑌸𑌨𑍍𑌤𑌤𑍍𑌯𑍈 𑌅𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌾𑌯 𑌇𑌤𑌿 𑌅𑌰𑍍𑌥𑌃 । 𑌵𑌿𑌚𑍍𑌛𑌿𑌦𑍍𑌯𑍇𑌰𑌨𑍍 𑌹𑌿 𑌇𑌮𑍇 𑌲𑍋𑌕𑌾𑌃, 𑌪𑍁𑌤𑍍𑌰𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌨𑌾𑌦𑌿 𑌯𑌦𑌿 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑍁𑌃 𑌕𑍇𑌚𑌨 । 𑌏𑌵𑌂 𑌪𑍁𑌤𑍍𑌰𑍋𑌤𑍍𑌪𑌾𑌦𑌨𑌾𑌦𑌿𑌕𑌰𑍍𑌮𑌾𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍇𑌨 𑌏𑌵 𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌃 𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑌰𑍂𑌪𑍇𑌣 𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌹𑌿 𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌇𑌮𑍇 𑌲𑍋𑌕𑌾𑌃, 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌦𑌵𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑌾𑌯 𑌤𑌤𑍍 𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑌂 𑌨 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌯 𑌇𑌤𑌿 𑌅𑌰𑍍𑌥𑌃 । 𑌤𑌸𑍍𑌯 𑌪𑌿𑌤𑍁𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌿𑌣𑌃 𑌕𑍁𑌮𑌾𑌰𑌰𑍂𑌪𑍇𑌣 𑌮𑌾𑌤𑍁𑌃 𑌉𑌦𑌰𑌾𑌤𑍍 𑌯𑌤𑍍 𑌨𑌿𑌰𑍍𑌗𑌮𑌨𑌂 𑌤𑌤𑍍 𑌰𑍇𑌤𑍋𑌰𑍂𑌪𑌾𑌪𑍇𑌕𑍍𑌷𑌯𑌾 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 𑌜𑌨𑍍𑌮 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌵𑌸𑍍𑌥𑌾𑌭𑌿𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌿𑌃 ॥ ௩ ॥

௪. 𑌸𑍋𑌽𑌸𑍍𑌯𑌾𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌪𑍁𑌣𑍍𑌯𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌮𑌭𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 । 𑌅𑌥𑌾𑌸𑍍𑌯𑌾𑌯𑌮𑌿𑌤𑌰 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑍋 𑌵𑌯𑍋𑌗𑌤𑌃 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 𑌸 𑌇𑌤𑌃 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍𑌨𑍇𑌵 𑌪𑍁𑌨𑌰𑍍𑌜𑌾𑌯𑌤𑍇 𑌤𑌦𑌸𑍍𑌯 𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 𑌜𑌨𑍍𑌮 ॥

---

கிறான்" என்பதுமுதலாகக் கூறப்பட்டுளது. ஆகவே, எதற்காகத் தன்னைப் புத்ரவடிவாகப் பிறப்பித்து வளர்க்கின்றான்? என்றவழிக், கூறுவோம் :— இவ்வுலகங்களின் தொடர்ச்சிக்காக, அறுமைக்காக என்றபடி. மக்களைப் பிறப்பித்தல் முதலியவற்றை ஒருவரும் செய்யாராயின், இவ்வுலகங்கள் அற்றுப்போகுமன்றே. இவ்வாறு மக்களைப் பிறப்பித்தல் முதலிய செய்கைகள் அறுமையினாலன்றோ இவ்வுலகங்கள் தொடர்ச்சியாகச் செல்லுகின்றன; ஆகவே, அவை அறுமைக்காக அதனைச்செய்யவேண்டும், மோக்ஷத்திற்காக இல்லை என்பது பொருள். ஸம்ஸாரியானவன் தாயின் வயிற்றினின்று குழந்தைவடிவாக வெளிவருதல் எதுவோ அது ரேதஸ்வடிவை நோக்க இரண்டாம் பிறப்பு, இரண்டாவது நிலைமையின் வெளிப்பாடு. (௩)

மூன்றும் பிறப்பு.

௪. அவனுடைய அந்த இவ்வாத்மா நற்செய்கைகட்காக ஈடுவைக்கப்படுகின்றது. பின்பு, அவனுடைய இந்த வேறுஆத்மா செய்யவேண்டியவற்றைச் செய்ததாய் வயதுசென்றதாய் இறக்கின்றது. இது இங்கிருந்து வெளியேறுவதேயாகி மீண்டும் பிறக்கின்றது. அதுஅதற்கு மூன்றும்பிறப்பு.

அஸ்ய பிது: ஸ: அயம் புத்ராத்மா புண்யேப்ய: ஶாஸ்த்ரோக்தேப்ய: கர்மப்ய: கர்மநிஷ்பாதநாய ப்ரதிதீயதே, பிது: ஸ்தாநே பித்ரா யத் கர்தவ்யம் தத்கரணாய ப்ரதிநிதீயத இதி அர்த்த: । ததா ச ஸம்ப்ரத்திவித்யாயாம் வாஜஸநேயகே—“பித்ராऽநுஶிஷ்டோऽஹம் ப்ரஹ்மாऽஹம் யஜ்ஞ இத்யாதி ப்ரதிபத்யதே” இதி । அத அநந்தரம் புத்ரே நிவேஶ்ய ஆத்மநோ பாரம் அஸ்ய புத்ரஸ்ய இதர: அயம் ய: பிதாத்மா க்ருதக்ருத்ய: கர்தவ்யாத் ருணத்ரயாத் விமுக்த: க்ருதகர்தவ்ய: இதி அர்த்த:, வயோகத: கதவயா: ஜீர்ண: ஸந் ப்ரைதி ம்ரியதே; ஸ இத: அஸ்மாத் ப்ரயந்நேவ ஶரீரம் பரித்யஜந்நேவ த்ருணஜலூகாவத் தேஹாந்தரம் உபாததாந: கர்மசிதம்

---

தந்தையினுடைய அந்த இப் புத்ரனாகிய ஆத்மாவானது நூலினுள் கூறியுள்ள புண்யகர்மங்களைச் செய்யவேண்டி தகப்பனது இடத்திலே ஈடுவைக்கப்படுகின்றது, தகப்பனால் செய்யவேண்டியது எதுவோ அதனைச் செய்யும்பொருட்டு (அவனுக்கு)ப் பதிலாக வைக்கப்படுகின்றது என்றவாறு. அப்படியே, வாஜஸநேயகத்து ஸம்ப்ரத்திவித்யையினுள் [தகப்பன் தான் செய்யவேண்டியதை மகனிடத்து ஒப்புவித்தலைக் கூறும் இடத்திலே], “தந்தையினால் அறிவுறுத்தப் பெற்றவன் ‘நான் வேதம், நான் யஜ்ஞம் [நான் வேதத்தை ஓதுவேன், யஜ்ஞத்தைச் செய்வேன்]’ என்பனமுதலியவற்றை ஒப்புக்கொள்கிறான்” என(க் கூறப்பட்டுளது). தனது பாரத்தை மகனிடத்து வைத்தபின்னர், மகனுடைய வேறோர் (ஆத்மாவான) எந்த இத் தகப்பனாகிய ஆத்மாவானது செய்யவேண்டிய (தேவர்கடன், பிதிரர்கடன், முனிவர்கடன் என்னும்) மூன்று கடனையும் தப்பியதாய் வயதுசென்று தளர்ந்ததாய் இறக்கின்றதோ, அது இங்கிருந்து வெளியேறும்பொழுதேயே, உடம்பை விடும்பொழுதேயே கம்பளிப்பூச்சி போல, கர்மத்தினாலமைந்த வேறோர்உடம்பை எடுத்துக்கொண்டு (ஸ்வர்க்கத்திலாயினும் நரகத்திலாயினும் மனிதலோகத்திலாயினும்)

புந: ஜாயதே । தத் அஸ்ய ம்ருத்வா ப்ராப்தவ்யம் யத் தத் த்ருதீயம் ஜந்ம ॥

நநு ஸம்ஸாரிண: பிது: ஸகாஶாத் ரேதோரூபேண ப்ரதமம் ஜந்ம; தஸ்யைவ மாது: குமாரரூபேண த்விதீயம் ஜந்ம உக்தம் । தஸ்யைவ த்ருதீயே ஜந்மநி வக்தவ்யே, ப்ரேதஸ்ய பிது: யத் ஜந்ம தத் த்ருதீயம் இதி கதம் உச்யதே ?

நைஷ தோஷ: ; பிதாபுத்ரயோ: ஏகாத்மத்வஸ்ய விவக்ஷிதத்வாத் । ஸோऽபி புத்ர: ஸ்வபுத்ரே பாரம் நிதாய இத: ப்ரயந்நேவ புநர்ஜாயதே, யதா பிதா । தத் அந்யத்ர உக்தம் இதரத்ர அபி உக்தம் ஏவ பவதி இதி மந்யதே ஶ்ருதி: ; பிதாபுத்ரயோ: ஏகாத்மத்வாத் ॥ ச ॥

---

மறுபடியும் பிறக்கின்றது. இறந்தபின்பு அடையவேண்டியது எதுவோ, அது அவனுக்கு [ஸம்ஸாரிக்கு] மூன்றும் பிறப்பாம்.

(சங்கை) :— ஆயின், ஸம்ஸாரியானவன் தந்தையினிடத்தினின்று ரேதஸ்வடிவமாக (வெளிவருதல்) முதல்பிறப்பாகவும், அவனே தாயினிடத்தினின்று குழந்தைவடிவமாக (வெளிவருதல்) இரண்டாம் பிறப்பாகவும் கூறப்பட்டன. அவனுக்கே மூன்றுவது பிறப்புச் சொல்லவேண்டியிருக்க, இறக்கின்ற தந்தைக்கு (வரும்) பிறவி எதுவோ, அது மூன்றுவது [மூன்றும் பிறப்பு] என்று எப்படிச் சொல்லப்படுகின்றது ?

(ஸமாதாநம்) :— இது குற்றமன்று ; தந்தையும் மகனும் ஒரே ஆத்மாவாம் என்பது சொல்லுவான்குறிப்பாதலின். அந்த மகனும் தன் மகனிடத்து பாரத்தை வைத்துப் பின்பு இங்கிருந்து வெளியேறுகிறவனாகவே மீண்டும் பிறக்கிறான் ; தகப்பன்போல. ஓரிடத்துச் சொல்லப்பட்ட அது மற்றோரிடத்தும் சொல்லப்பட்டதாகவே ஆகின்றது எனச் சுருதி கருதுகின்றது ; தந்தையும் மகனும் ஒரே ஆத்மாவாதலின். (ச)

௫. तदुक्तमृषिणा—

गर्भे नु सन्नन्वेषामवेदमहं देवानां जनिमानि विश्वा। शतं मा पुर आयसीररक्षन्नधः श्येनो जवसा निरदीयमिति॥

गर्भ एवैतच्छयानो वामदेव एवमुवाच॥

एवं संसारानुभवप्रवृत्तोऽयं जन्ममरणप्रबन्धारूढः सर्वो लोकः संसारसमुद्रे निपतितः कथंचिद्यदा श्रुत्युक्तं विजानाति यस्यां कस्यांचिदवस्थायां, तदा एव मुक्तसर्वसंसारबन्धनः कृतकृत्यो भवति इति एतस्मिन्नर्थे ऋषिणा मन्त्रेणापि उक्तमित्याह— गर्भे नु सन् मातुः गर्भाशये एव

ஸ ம் ஸா ர க ஷ் ட மு ம், த த் து வ ஞா ன மு ம்.

௫. அது ரிஷியினால் கூறப்பட்டுளது :—

"கர்ப்பத்தினுள்ளன்றோ இருக்கின்ற நான், இந்த தேவர்களுடைய எல்லாப் பிறப்புக்களையும் கிரமமாக அறிந்திருக்கின்றேன். முன்பு, இரும்பினாலான நூறு கோட்டைகள் என்னைக் காவல்செய்தன. இப்பொழுது நான் வல்லூறு(போல) விரைவாக வெளியேவந்திருக்கிறேன்" என்பது.

வாமதேவன் கர்ப்பத்தினுள்ளேயே கிடப்பவனாய் இதனை இவ்வாறு கூறலாயினான்.

*இவ்வாறு மூன்று நிலைமைத்தோற்றங்களாலும் உழன்று செல்பவனாய்ப் பிறப்பிறப்புத்தொடர்ச்சியை மாட்டிக்கொண்டுநிற்கின்ற ஒவ்வொரு ப்ராணியும் ஸம்ஸாரக்கடலினுள் வீழ்ந்ததாகி, எந்த ஓர் நிலைமையிலே ஒருவாறு ஆத்மாவைச் சுருதிகூறியபடி உணர்கின்றதோ, அப்பொழுதேயே ஸகல ஸம்ஸாரக்கட்டினின்றும் நீங்கியதாய் செய்ய வேண்டியதைச் செய்த தாகின்றது; என்ற இப் பொருள் (இங்குச் சொல்லக்கருதியது என, ஸம்ஸாரக்கடலினுள் வீழ்தலும் அதனினின்று மெய்யறிவினால் கரையேறுதலுமாகிய) அது ரிஷியினால் மந்திரத்தினுள்ளும் கூறப்பட்டிருக்கின்றது என்கிறார் :—நான் தாயினுடைய*

𑌸𑌨𑍍𑌨𑍁 — 𑌨𑍁 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌤𑌰𑍍𑌕𑍇 — 𑌅𑌨𑍇𑌕𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑍍𑌤𑌰𑌭𑌾𑌵𑌨𑌾𑌪𑌰𑌿𑌪𑌾𑌕𑌵𑌶𑌾𑌤𑍍 𑌏𑌷𑌾𑌂 𑌦𑍇𑌵𑌾𑌨𑌾𑌂 𑌵𑌾𑌗𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌾𑌂 𑌜𑌨𑌿𑌮𑌾𑌨𑌿 𑌜𑌨𑍍𑌮𑌾𑌨𑌿 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾 𑌵𑌿𑌶𑍍𑌵𑌾𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑌿 𑌅𑌨𑍁 𑌅𑌵𑍇𑌦𑌮𑍍 𑌅𑌹𑌮𑍍, 𑌅𑌹𑍋 ! 𑌅𑌨𑍁𑌬𑍁𑌦𑍍𑌧𑌵𑌾𑌨𑍍 𑌅𑌸𑍍𑌮𑌿 𑌇𑌤𑌿 𑌅𑌰𑍍𑌥𑌃 । 𑌶𑌤𑌮𑍍 𑌅𑌨𑍇𑌕𑌂 𑌬𑌹𑍍𑌵𑍍𑌯𑌾 𑌮𑌾 𑌮𑌾𑌂 𑌪𑍁𑌰𑌃 𑌆𑌯𑌸𑍀𑌃 𑌆𑌯𑌸𑍍𑌯𑌃 𑌲𑍋𑌹𑌮𑌯𑍍𑌯 𑌇𑌵 𑌅𑌭𑍇𑌦𑍍𑌯𑌾𑌨𑌿 𑌶𑌰𑍀𑌰𑌾𑌣𑌿 𑌇𑌤𑌿 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃, 𑌅𑌰𑌕𑍍𑌷𑌨𑍍 𑌰𑌕𑍍𑌷𑌿𑌤𑌵𑌤𑍍𑌯𑌃 𑌸𑌂𑌸𑌾𑌰𑌪𑌾𑌶𑌨𑌿𑌰𑍍𑌗𑌮𑌨𑌾𑌤𑍍 । 𑌅𑌧𑌃 𑌅𑌥 𑌶𑍍𑌯𑍇𑌨𑌃 𑌇𑌵 𑌜𑌾𑌲𑌂 𑌭𑌿𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌜𑌵𑌸𑌾 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌕𑍃𑌤𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑍇𑌨 𑌨𑌿𑌰𑌦𑍀𑌯𑌂 𑌨𑌿𑌰𑍍𑌗𑌤𑌃 𑌅𑌸𑍍𑌮𑌿 ॥

---

கருப்பையினுள்ளன்றோ இருப்பவனாய், சென்ற பல பிறவிகளிலே (செய்த ஆத்மஅநாத்மஆராய்ச்சித்) தெளிவினது முதிர்ச்சியின் வலிமையினால் இந்த வாக்கு அக்நி முதலான தேவர்களுடைய எல்லாப் பிறவிகளையும் முறையே அறிந்திருக்கிறேன், ஆ! ஒழுங்காக அறிந்தவனாயிருக்கிறேன் என்பது பொருள். ["வாயினின்று வாக்கு; வாக்கினின்று அக்நி" (க - க - ச) என்பதுமுதலிய சுருதியினால் உணர்த்தப்பட்டதாய் பரம்பொருளினால் அமைக்கப்பட்டதான தேவரது பிறப்பை அறிந்தவனாயிருக்கிறேன்; உபநிஷத்துக்கள் உணர்த்துகின்ற ஆத்மஅறிவு எனக்கு இப்பொழுது கிடைத்துவிட்டது என்பது முடிந்த கருத்து.] (கர்ப்பத்தினுள்ளன்றோ என்பதனிலுள்ள) 'அன்றோ' என்பது, நினைத்தற்பொருளின்மேல் நிற்பது. நூறு - அனேகம், பல. இரும்பினாலான கோட்டைகள் (என்பதற்கு) - இரும்புமயமானவை போன்று தகர்க்கமுடியாத உடம்புகள் என்பது கருத்து. காவல்செய்தன — ஸம்ஸாரவலையைத் தப்பிப்போதலினின்றும் காத்தன. (நான் பிறந்து இறந்து உழலுதலாகிய சிறைச்சாலையினின்றும் விடுதலையையடையாவண்ணம் இவ்வுடம்புகள் என்னைக் காத்துக்கொண்டிருந்தன என்பது தேர்ந்த பொருள்.) பின்பு [இப்பொழுதோ], வல்லூறு வலையைப் பிய்த்துக்கொண்டு (வெளியே ஓடிப்போமாறு) போல, நான் ஆத்மஅறிவினாலான வன்மையினால் விரைவாக வெளியேவந்திருக்கிறேன், (அஜ்ஞானமயமான ஸம்ஸாரத்தைத் தப்பியவனாயிருக்கிறேன்).

அஹோ ! கர்ப்பே ஏவ ஶயானோ வாமதேவ: ருஷி: ஏவமுவாச ஏதத் — ॥ ௫ ॥

ஸ: ஸ ஏவம் வித்வானஸ்மாச்சரீரபேதாதூர்த்வ உத்க்ரம்யாமுஷ்மின் ஸ்வர்கே லோகே ஸர்வான்காமானாப்த்வாऽம்ருத: ஸமபவத்ஸமபவத் ॥

இதி ஐதரேயோபநிஷதி த்விதீயாத்யாயே ப்ரதம: கண்ட: ॥

இதி ஐதரேயோபநிஷதி த்விதீயோऽத்யாய: ॥

ஸ வாமதேவ: ருஷி: யதோக்தம் ஆத்மானம் ஏவம் வித்வான் அஸ்மாத் ஶரீரபேதாத் ஶரீரஸ்ய அவித்யாபரிகல்பிதஸ்ய ஆயஸவத் அநிர்பேத்யஸ்ய ஜனனமரணாத்யனேகானர்த்தஶதாவிஷ்ட-ஶரீரப்ரபந்தஸ்ய பரமாத்மஜ்ஞானாம்ருதோபயோகஜநித-வீர்யக்ருதபேதாத், ஶரீரோத்பத்திபீஜாவித்யாதிநிமித்தோபமர்த்த-ஹேதோ: ஶரீரவிநாஶாத் இதி அர்த்த:, ஊர்த்வ: ஸன் பரமாத்-

ஆச்சரியம்! வாமதேவன் என்னும் ரிஷி கர்ப்பத்தினுள்ளேயே கிடப்பவனாய் இதனை இவ்வாறு சொல்லலாயினன்! (௫)

ஸ. அவன் இவ்வாறு அறிந்தவனாய், வேண்டியவற்றையெல்லாம் (இங்கேயே) அடைந்து, இவ்வுடம்புஅழிவினாலே மேலானவனாய்க் கிளம்பி இந்த ஸ்வர்க்கலோகத்திலே சாகாதவ னாயினன், (சாகாதவ) னாயினன்.

ஐதரேயஉபநிஷத்திலே இரண்டாம் அத்தியாயத்தில் முதற்பிரிவு முற்றும்.

ஐதரேயஉபநிஷத்திலே இரண்டாம் அத்தியாயம் முடிந்தது.

[இவ்வுடம்புஅழிவினாலே - அஜ்ஞானத்தால் கற்பித்துக்கொள்ளப் பட்டு, இரும்பினாலானதுபோல் தகர்க்கவொண்ணாததாகி, பிறப்பு இறப்பு முதலிய பல நூறு தீங்குகளால் உடலமைப்பு வியாபிக்கப்பெற்ற உடம்பை, பரமாத்மாவை யுணர்தலாகிய அமிருதத்தை உபயோகித்து [குடித்து] உண்டான திண்மையைக்கொண்டு தகர்த்தலாலே; உடம்பு முளைத்தற்கு வித்தான அஜ்ஞானம்முதலிய காரணங்களை விள்ளச் செய்வதாகிய சரீரஅழிவினாலே என்றபடி. ஸ்வர்க்கலோகத்திலே — தன் ஆத்

𑌭𑍂𑌤𑌃 𑌸𑌨𑍍 𑌅𑌧𑍋𑌭𑌾𑌵𑌾𑌤𑍍 𑌸𑌂𑌸𑌾𑌰𑌾𑌤𑍍 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌵𑌦𑍍𑌯𑍋𑌤𑌿𑌤𑌾𑌮𑌲𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌮𑍍 𑌆𑌪𑌨𑍍𑌨𑌃 𑌸𑌨𑍍 𑌅𑌮𑍁𑌷𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑍇 𑌅𑌜𑍇 𑌅𑌜𑌰𑍇 𑌅𑌮𑌰𑍇 𑌅𑌮𑍃𑌤𑍇 𑌅𑌭𑌯𑍇 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑍇 𑌅𑌪𑍂𑌰𑍍𑌵𑍇 𑌅𑌨𑌪𑌰𑍇 𑌅𑌨𑌨𑍍𑌤𑌰𑍇 𑌅𑌬𑌾𑌹𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌮𑍃𑌤𑍈𑌕𑌰𑌸𑍇 𑌪𑍍𑌰𑌦𑍀𑌪𑌵𑌤𑍍 𑌨𑌿𑌰𑍍𑌵𑌾𑌣𑌮𑍍 𑌅𑌭𑍍𑌯𑌗𑌮𑌤𑍍; 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌸𑍍𑌵𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌿 𑌸𑍍𑌵 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑍇 𑌅𑌮𑍃𑌤𑌃 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍; 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌪𑍂𑌰𑍍𑌵𑌮𑍍 𑌆𑌪𑍍𑌤𑌕𑌾𑌮𑌤𑌯𑌾 𑌜𑍀𑌵𑌨𑍍 𑌏𑌵 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌆𑌪𑍍𑌤𑍍𑌵𑌾 𑌇𑌤𑌿 𑌅𑌭𑌿𑌪𑍍𑌰𑌾𑌯𑌃 ॥

---

மாவான தன்ஸ்வரூபத்திலே. அந்த வாமதேவரிஷி, கீழ்க்கூறிய ஆத்மாவை இவ்வாறு உணர்ந்து சரீரமுடிவினுல் பரமாத்மாவாகி, கீழ்நிலைமையாகிய ஸம்ஸாரத்தினின்றும் மேலேகிளம்பி, அறிவினுல் விளக்கப்பட்ட மாசற்ற ஸர்வாத்மநிலையை யடைந்தவனுகி, பிறவாது மூப்பில்லாது இறப்பில்லாது சாகாது பயமில்லதாய் எல்லாம் அறிந்ததாய் முதலில்லாது இரண்டாவதில்லாது முடிவில்லாது உள்இல்லாது வெளியில்லாதுநிற்கும் கீழ்க்கூறிய அறிவான அமிருதமாகிய ஓரேரஸத்திலே விளக்கைப்போல ஒழிந்த னுற்ருன் [சுடர் அணைந்தவழி விளக்குத் தன்னையே போய்ச்சேருமாறுபோல், உடம்பு அழிந்தவழி அவன் தன்னையே, தன்ஸ்வரூபத்தையே போய்ச்சேர்ந்தான்]; தன் ஆத்மாவான தன் ஸ்வரூபத்திலே சாகாதவ னுனன். **வேண்டியவற்றை யெல்லாம் அடைந்து** - வேண்டியவற்றை ஆத்மஅறிவினுல் முன்னர் அடைந்துள்ளமையால், வேண்டியவற்றையெல்லாம் உயிர்வாழும்பொழுதேயே [ஜீவன்முக்திநிலையிலேயே] அடைந்து என்றவாறு. (குரு உபதேசித்தலும் சாஸ்திரத்தை உணர்தலும் ஆத்மாவை ஆராய்தலும் மற்றுமித் தன்மையனவும் கர்ப்பத்தில் இல்லையாயினும், இடையூறு நீங்குமளவிலே கர்ப்பத்திலும் ஞானமுண்டாத லாகும்; முந்தின ஜன்மத்தில் செய்துவைத்த இந்த ஸாதநங்களின் வலிமையினு லென்க. அவ்வண்ணமே, பாதராயண பகவான் ப்ரஹ்மஸூத்ரத்தின் ௩ - ஆம் அத்தியாயத்து ச - ஆம் பாதத்திலே ௧௬ - ஆம் அதிகரணத்தினுள் அருளிச் செய்ததையும் காண்க.)

𑌆𑌵𑍃𑌤𑍍𑌤𑌂 𑌸𑌫𑌲𑌸𑍍𑌯 𑌸𑍋𑌦𑌾𑌹𑌰𑌣𑌸𑍍𑌯 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌪𑌰𑌿𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌿𑌦𑍍𑌯𑍋𑌤𑌨𑌾𑌰𑍍𑌥𑌮𑍍 ॥ ௩ ॥

𑌇𑌤𑌿 𑌐𑌤𑌰𑍇𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇
𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌖𑌣𑍍𑌡𑌃 ॥

𑌇𑌤𑌿 𑌐𑌤𑌰𑍇𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

(சாகாதவ.........ஞயினன் என) இருமுறை கூறுதல் - ஆத்ம அறிவை, பயனோடும் உதாஹரணத்தோடும் முடித்தலை எடுத்துக்காட்டும்பொருட்டு. (பயன் - மோக்ஷம். உதாஹரணம் - வாமதேவன்.) (௩)

ஐதரேயஉபநிஷத்பாஷ்யத்திலே இரண்டாம் அத்தியாயத்தில்
முதல் பிரிவு முற்றும்.

ஐதரேயஉபநிஷத்பாஷ்யத்திலே இரண்டாம் அத்தியாயம் முடிந்தது.

---

# இரண்டாம் அத்தியாயம்.

## முதல் பிரிவு.

### பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑌅𑌯𑌂 𑌵𑍈 | இவன் |
| 𑌆𑌦𑌿𑌤𑌃 | முதலில் |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 𑌹 | புருஷனிடத்து |
| 𑌗𑌰𑍍𑌭𑌃 | கர்ப்பமாக |
| 𑌭𑌵𑌤𑌿 | இருக்கிறான்; |
| 𑌯𑌦𑍇𑌤𑌤𑍍 | இந்த |
| 𑌰𑍇𑌤𑌃 | சுக்லம் |
| 𑌯𑌤𑍍 | எதுவாக |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கிறதோ) |
| (𑌤𑌤𑍍) | (அதுவாக) |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கிறான்.) |
| 𑌤𑌤𑍍 | அந்த |
| 𑌏𑌤𑌤𑍍 | இது |
| 𑌸𑌰𑍍𑌵𑍇𑌭𑍍𑌯𑌃 | எல்லா |
| 𑌅𑌙𑍍𑌗𑍇𑌭𑍍𑌯𑌃 | உறுப்புக்களினின்றும் |
| 𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 | உண்டான |
| 𑌤𑍇𑌜𑌃 | ஸாரமாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (உள்ளது.) |
| (𑌪𑍁𑌰𑍁𑌷𑌃) | (புருஷன்) |

| | |
|---|---|
| (தத்) | (அந்த) |
| (ரேதஃ) | (ரேதஸாகிய) |
| ஆத்மாநம் | ஆத்மாவை |
| ஆத்மநி ஏவ | தன்னிடத்தேயே |
| பிபர்தி | தாங்கிக்கொண்டிருக்கிறன்; |
| யதா | எப்பொழுது |
| தத் | அதனை |
| ஸ்த்ரியாம் | ஸ்திரீயினிடத்து |
| ஸிஞ்சதி | சொரிகின்றனோ, |
| அத | அப்பொழுது |
| ஏநத் | இதனை |
| ஜநயதி | பிறப்பிக்கிறன். |
| தத் | அது |
| அஸ்ய | அதனுக்கு |
| ப்ரதமம் | முதல் |
| ஜந்ம | பிறப்பு |
| (ஸ்யாத்) | (ஆகும்.) |

---

உ.

| | |
|---|---|
| யதா | எப்படி |
| ஸ்வம் | தன்னுடைய |
| அங்கம் | அவயவம் |
| (ஆத்மபூயம்) | (ஆத்மாவாதலை) |
| (கச்சதி) | (அடைகின்றதோ) |
| ததா | அப்படி |
| தத் | அது |
| ஸ்த்ரியாஃ | ஸ்திரீயினுடைய |
| ஆத்மபூயம் | ஆத்மாவாதலை |
| கச்சதி | அடைகின்றது. |

| | |
|---|---|
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆதலால் |
| (𑌤𑌤𑍍) | (அது) |
| 𑌏𑌨𑌾𑌂 | இவளை |
| 𑌨 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑌿 | ஹிம்ஸிக்கின்றதில்லை. |
| 𑌸𑌾 | அவள் |
| 𑌅𑌤𑍍𑌰 | இங்கே |
| 𑌗𑌤𑌂 | சென்றுள்ளதாகிய |
| 𑌅𑌸𑍍𑌯 | இவனுடைய |
| 𑌏𑌤𑌂 | இந்த |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 | ஆத்மாவை |
| 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 | வளர்க்கிறாள். |
| 𑌸𑌾 | அவள் |
| (𑌗𑌰𑍍𑌭𑌸𑍍𑌯) | (கர்ப்பத்தை) |
| 𑌭𑌾𑌵𑌯𑌿𑌤𑍍𑌰𑍀 | வளர்க்கிறவளாய் |
| 𑌭𑌾𑌵𑌯𑌿𑌤𑌵𑍍𑌯𑌾 | வளர்க்கவேண்டியவளாக |
| 𑌭𑌵𑌤𑌿 | இருக்கிறாள். |
| 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 | ஸ்திரீயானவள் |
| 𑌤𑌂 | அந்த |
| 𑌗𑌰𑍍𑌭𑌂 | கர்ப்பத்தை |
| 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 | சுமக்கிறாள். |
| 𑌸𑌃 | அவன் |
| (𑌤𑌸𑍍𑌯) | (அதனது) |
| 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 | பிறப்பிற்கு |
| 𑌅𑌗𑍍𑌰𑍇 𑌏𑌵 | முன்னமே(யும்) |
| 𑌅𑌗𑍍𑌰𑍇 | ஆரம்பத்தி(லும்) |
| 𑌅𑌧𑌿 | பின்(னும்) |
| 𑌕𑍁𑌮𑌾𑌰𑌂 | குழந்தையை |
| 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 | வளர்க்கிறான். |

௩.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் |
| 𑌯𑌤𑍍 | எதனால் |
| 𑌕𑍁𑌮𑌾𑌰𑌂 | குழந்தையை |
| 𑌜𑌨𑍍𑌮𑌨𑌃 | பிறப்பிற்கு |
| 𑌅𑌗𑍍𑌰𑍇 | முன்னும் |
| 𑌅𑌧𑌿 | பின்னும் |
| 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 | வளர்க்கின்றானோ |
| 𑌤𑌤𑍍 | அதனால் |
| 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌏𑌵 | தன்னையே |
| 𑌭𑌾𑌵𑌯𑌤𑌿 | வளர்க்கிறான் |
| 𑌏𑌷𑌾𑌂 | இந்த |
| 𑌲𑍋𑌕𑌾𑌨𑌾𑌂 | உலகங்களுடைய |
| 𑌸𑌨𑍍𑌤𑌤𑍍𑌯𑍈 | தொடர்ச்சிக்காக. |
| 𑌹𑌿 | ஏனெனில் |
| 𑌏𑌤𑍇 | இந்த |
| 𑌲𑍋𑌕𑌾𑌃 | உலகங்கள் |
| 𑌏𑌵𑌂 | இவ்வாறு |
| 𑌸𑌨𑍍𑌤𑌤𑌾𑌃 | தொடர்ந்துவருகின்றன. |
| 𑌤𑌤𑍍 | அது |
| 𑌅𑌸𑍍𑌯 | அதற்கு |
| 𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌂 | இரண்டாவது |
| 𑌜𑌨𑍍𑌮 | பிறப்பு |
| (𑌸𑍍𑌯𑌾𑌤𑍍) | (ஆகும்.) |

---

௪.

| | |
|---|---|
| 𑌅𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌸𑌃 | அந்த |
| 𑌅𑌯𑌂 𑌆𑌤𑍍𑌮𑌾 | இவ்வாத்மா |

| | |
|---|---|
| 𑌪𑍁𑌣𑍍𑌯𑍈𑌃 | புண்யமான |
| 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌃 | கர்மங்கட்காக |
| 𑌆𑌧𑍀𑌯𑌤𑍇 | ஈடுவைக்கப்படுகின்றது. |
| 𑌅𑌥 | பின்பு |
| 𑌅𑌸𑍍𑌯 | அவனுடைய |
| 𑌅𑌯𑌂 | இந்த |
| 𑌇𑌤𑌰𑌃 | வேறு |
| 𑌆𑌤𑍍𑌮𑌾 | ஆத்மா |
| 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌃 | செய்யவேண்டியதைச்செய்ததாய் |
| 𑌵𑌯𑍋𑌗𑌤𑌃 | வயதுசென்றதாய் |
| 𑌪𑍍𑌰𑍈𑌤𑌿 | இறக்கின்றது. |
| 𑌸𑌃 | அது |
| 𑌇𑌤𑌃 | இங்கிருந்து |
| 𑌪𑍍𑌰𑌯𑌨𑍍 𑌏𑌵 | வெளியேறுவதேயாய் |
| 𑌪𑍁𑌨𑌃 | மீளவும் |
| 𑌜𑌾𑌯𑌤𑍇 | பிறக்கின்றது. |
| 𑌤𑌤𑍍 | அது |
| 𑌅𑌸𑍍𑌯 | அதற்கு |
| 𑌤𑍃𑌤𑍀𑌯𑌂 | மூன்றாவது |
| 𑌜𑌨𑍍𑌮 | பிறப்பு |
| (𑌭𑌵𑌤𑌿) | (ஆகும்.) |

௫.

| | |
|---|---|
| 𑌤𑌤𑍍 | அது |
| 𑌋𑌷𑌿𑌣𑌾 | ரிஷியினால் |
| 𑌉𑌕𑍍𑌤𑌂 | கூறப்பட்டிருக்கின்றது : |
| 𑌗𑌰𑍍𑌭𑍇 𑌨𑍁 | கர்ப்பத்திலுள்ளன்றோ |
| 𑌸𑌨𑍍 | இருக்கின்ற |
| 𑌅𑌹𑌂 | நான் |

| | |
|---|---|
| ஏஷாம் | இந்த |
| தேவாநாம் | தேவர்களுடைய |
| விஶ்வா | எல்லா |
| ஜநிமாநி | பிறவிகளையும் |
| அநு | முறையே |
| அவேதம் | அறிந்திருக்கின்றேன். |
| அயஃ | கீழே |
| ஆயஸீஃ | இரும்பினாலான |
| ஶதம் | நூறு |
| புரஃ | கோட்டைகள் |
| மா | என்னை |
| அரக்ஷந் | காத்தன. |
| அயஃ | பின்பு |
| (அஹம்) | (நான்) |
| ஶ்யேநஃ (இவ) | வல்லூறு (போல) |
| ஜவஸா | விரைவாக |
| நிரதீயம் | வெளிவந்திருக்கிறேன் |
| இதி | என்பது. |
| கர்பே ஏவ | கர்ப்பத்தினுள்ளேயே |
| ஶயாநஃ | கிடக்கின்ற |
| வாமதேவஃ | வாமதேவன் |
| ஏதத் | இதனை |
| ஏவம் | இவ்வாறு |
| உவாச | சொன்னான். |

அயஃ என்பதை - மத்யதீபிகாமுறைமையினால், முந்தின வாக்யத்தோடும் பிந்தின வாக்யத்தோடும் ஒட்டுக.

---

௬.

| | |
|---|---|
| ஸஃ | அவன் |
| ஏவம் | இவ்வாறு |

| | |
|---|---|
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 | அறிந்தவனாய் |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | எல்லா |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 | விருப்பங்களையும் |
| (𑌇𑌹 𑌸𑌰𑍍𑌵) | (இங்கேயே) |
| 𑌆𑌪𑍍𑌤𑍍𑌵𑌾 | அடைந்து |
| 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | இந்த |
| 𑌶𑌰𑍀𑌰𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑌾𑌤𑍍 | தேகநாசத்தினாலே |
| 𑌉𑌦𑍍𑌧𑍃𑌤𑌃 | மேலானவனாய் |
| 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 | கிளம்பி |
| 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 | இந்த |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 | ஸ்வர்க்கமாகிய |
| 𑌲𑍋𑌕𑍇 | உலகிலே |
| 𑌅𑌮𑍃𑌤𑌃 | சாகாதவனாக |
| 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 | ஆனான் |
| 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 | ஆனான். |

𑌅𑌥

## 𑌤𑍃𑌤𑍀𑌯𑋼𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌖𑌣𑍍𑌡𑌃 ॥

---

௧. 𑌓𑌮𑍍 । 𑌕𑋼𑌽𑌯𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌵𑌯𑌮𑍁𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇 𑌕𑌤𑌰𑌃 𑌸 𑌆𑌤𑍍𑌮𑌾 । 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑌾𑌜𑌿𑌘𑍍𑌰𑌤𑌿 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌵𑌾𑌚𑌂 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁 𑌚𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑍁 𑌚 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 ॥

𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑌾𑌧𑌨𑌕𑍃𑌤𑌸𑌰𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌭𑌾𑌵𑌫𑌲𑌾𑌵𑌾𑌪𑍍𑌤𑌿𑌂 𑌵𑌾𑌮-𑌦𑍇𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑌂𑌪𑌰𑌯𑌾 𑌶𑍍𑌰𑍁𑌤𑍍𑌯𑌾 𑌚𑌾𑌵𑌦𑍍𑌯𑍋𑌤𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌂

---

## மூன்றும் அத்தியாயம்.

---

### முதல் பிரிவு.

**ஆத்ம ஆராய்ச்சி.**

க. ஓம். இந்த ஆத்மா யார் என நாம் தொழுகின்றோம்? அந்த ஆத்மா, இரண்டனுள் யார்? (ஒருவன்) எதனால் பார்க்கின்றானோ (அதுவா?) அல்லது எதனால் கேட்கின்றானோ (அதுவா?) அல்லது எதனால் நாற்றங்களை முகர்கின்றானோ (அதுவா?) அல்லது எதனால் வார்த்தையைப் பேசுகின்றானோ (அதுவா?) அல்லது எதனால் இனியதையும் இனியதல்லாததையும் உணர்கின்றானோ (அதுவா?)

! *ப்ரஹ்மத்தை உணர்வதனாலாகும் ஸர்வாத்மநிலை என்னும்பயனைப் பெறுதலானது வாமதேவன்முதலிய ஆசார்யபரம்பரையினாலே சுருதியுடன் விளக்கப்பட்டு, ப்ரஹ்மஞானிகூட்டத்திலே மிகப் பிரஸித்*

ப்³ரஹ்மவித்³ப்⁴ய: அவக³தப்³ரஹ்மவிஷயா: உபஸந்நா முமுக்ஷவோ ப்³ராஹ்மணா அது⁴நாதநா ப்³ரஹ்ம ஜிஜ்ஞாஸவ: அநித்யாத் ஸாத்⁴யஸாத⁴நலக்ஷணாத் ஸம்ஸாராத் ஆஜீவபா⁴வாத் வ்யாவிவ்ருத்தவ: விசாரயந்த: அந்யோந்யம் ப்ருச்ச²ந்தி க: அயம் ஆத்மா இதி । கத²ம்?—யம் ஆத்மாநம் அயம் ஆத்மா இதி ஸாக்ஷாத் வயம் உபாஸ்மஹே, க: ஸ ஆத்மா? இதி । யம் ச ஆத்மாநம் அயம் ஆத்மா இதி ஸாக்ஷாத் உபாஸீந: வாமதே³வ: அம்ருத: ஸம்வ்ருத்த:, தம் ஏவ வயம் உபாஸ்மஹே; கோ நு க²லு ஸ ஆத்மா? இதி । ஏவம் ஜிஜ்ஞாஸாபூர்வம் அந்யோந்யம் ப்ருஷ்டவத்³ப்⁴ய: அதிக்ராந்தவிஶேஷவிஷயஶ்ருதிஸம்ஸ்காரஜநிதா ஸ்ம்ருதி: அஜாயத "தம் ப்ரபதா³ப்⁴யாம் ப்ராபத்³யத ப்³ரஹ்ம இமம் புருஷம் । ஸ ஏதம் ஏவ

---

தமாயிருத்தலைத் தெரிந்துவைத்த முமுக்ஷுக்களான இப்பொழுதுள்ள ப்ராஹ்மணர்கள், ப்ரஹ்மத்தை ஆராயவேண்டியவராய், பயனும் கருவியுமாகி ஜீவத்தன்மைபொருந்திநிற்கும் அநித்யமான ஸம்ஸாரத்தினின்றும் திரும்ப[அதனை விட்டிட]க் கருதி (உண்மையினை) ஆலோசிப்பவராய், "இந்த ஆத்மா யார்?" என ஒருவரையொருவர் வினவுகின்றார்கள்.— எப்படி?— எந்த ஆத்மாவை, இந்த ஆத்மா என நாம் நேரே தொழுகின்றோமோ அந்த ஆத்மா யார்? என்பது. (இங்கே, தொழுதலாவது - இடையறாது கருத்தொடு வியவகரித்தல். 'நான் போகிறேன், நான் வருகிறேன், நான் உட்காருகிறேன், நான் உண்கிறேன், நான் உடுக்கிறேன், நான் உறங்குகிறேன்; இது என் உடம்பு, இது என் வீடு, இது என் மாடு' என இவ்வாறு இடையறாது ஆதரவொடு ஆத்மாவை வழங்குதல் உலகில் காணப்படுகின்றது. அந்த இதுவே இங்கு தொழுதலாக உபசரிக்கப்பட்டது. இங்ஙனம் நம்மனோரால் தொழப்படுகின்ற ஆத்மா யார்? என்பது.) அன்றியும், எந்த ஆத்மாவை, இந்த ஆத்மா என நேரே தொழுத வாமதேவன் சாகாதவனானனே, அதனையே நாமும் தொழுகின்றோம். அந்த ஆத்மா யாரோ? என்பது. இப்படி ஆராய்ச்சியுற்றுப் ஒருவரையொருவர் வினவிக்கொண்டிருப்பவர்க்கு - "ப்ரஹ்மமானது [ப்ராண

𑌸𑍀𑌮𑌾𑌨𑌂 𑌵𑌿𑌦𑌾𑌰𑍍𑌯𑍈𑌤𑌯𑌾 𑌦𑍍𑌵𑌾𑌰𑌾 𑌪𑍍𑌰𑌾𑌪𑌦𑍍𑌯𑌤 । 𑌸 𑌏𑌤𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌪𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌅𑌤𑍍𑌰 𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍀 𑌇𑌤𑌰𑍇𑌤𑌰𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌕𑍂𑌲𑍍𑌯𑍇𑌨 𑌪𑍍𑌰𑌤𑌿𑌪𑍇𑌦𑍇” 𑌇𑌤𑌿 । 𑌤𑍇 𑌚 𑌅𑌸𑍍𑌯 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌗𑍋𑌚𑌰𑍇 । 𑌤𑌯𑍋𑌃 𑌅𑌨𑍍𑌯𑌤𑌰𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑍋 𑌭𑌵𑌿𑌤𑍁𑌮𑌰𑍍𑌹𑌤𑌿 । 𑌯𑌃 𑌅𑌤𑍍𑌰 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌃 𑌕𑌃 𑌸𑌃 𑌆𑌤𑍍𑌮𑌾? 𑌇𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌨𑌿𑌰𑍍𑌧𑌾𑌰𑌣𑌾𑌰𑍍𑌥𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌂 𑌪𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑍁𑌃 𑌵𑌿𑌚𑌾𑌰𑌯𑌨𑍍𑌤𑌃 ॥

𑌪𑍁𑌨𑌃 𑌤𑍇𑌷𑌾𑌂 𑌵𑌿𑌚𑌾𑌰𑌯𑌤𑌾𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌵𑌿𑌚𑌾𑌰𑌣𑌾𑌸𑍍𑌪𑌦𑌵𑌿𑌷𑌯𑌾 𑌮𑌤𑌿𑌃 𑌅𑌭𑍂𑌤𑍍 । 𑌕𑌥𑌮𑍍?— 𑌦𑍍𑌵𑍇 𑌵𑌸𑍍𑌤𑍁𑌨𑍀 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑌿𑌣𑍍𑌡𑍇 𑌉𑌪𑌲𑌭𑍍𑌯𑍇𑌤𑍇,— 𑌅𑌨𑍇𑌕𑌭𑍇𑌦𑌭𑌿𑌨𑍍𑌨𑍇𑌨 𑌕𑌰𑌣𑍇𑌨 𑌯𑍇𑌨 𑌉𑌪𑌲𑌭𑌤𑍇, 𑌯𑌃 𑌚 𑌏𑌕 𑌉𑌪𑌲𑌭𑌤𑍇 𑌕𑌰𑌣𑌾𑌨𑍍𑌤𑌰𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑌵𑌿𑌷𑌯𑌸𑍍𑌮𑍃-

---

னது] அந்த இவ்வுடம்பினுள் இரண்டுகால்நுனிகளின்வழியாகப் புகுந்தது. அவன் இதே உச்சியைப் பிளந்து, இவ்வாசல்வழியாக (உள்ளே) புகுந்தான் (க - ந - கஉ). இங்கு இரண்டு ப்ரஹ்மங்களும் [ப்ராணனும் ஆத்மாவும்] ஒன்றற்கொன்று எதிர்முகமாக இதே உடம்பினுள் புகுந்துள்ளன” என, சென்ற விசேஷங்களை [உடம்பினுள் புகுந்தனவாகக் கீழ்க்கூறிய ப்ராணனையும் ஆத்மாவையும்] பற்றியதாய் (மனத்திலுள்ளே முன் கேட்டுவைத்த) சுருதிகளின் பதிவினாலே உண்டான நினைவு வந்தது. அவையிரண்டும் இவ்வுடம்பினது ஆத்மாவா யுள்ளவை. அவ்விரண்டனுள், எதாவதொன்று தொழக்கூடிய ஆத்மாவா யிருக்கவேண்டும். இங்கே தொழவேண்டியஆத்மா எதுவோ அது யாது? எனச் சிறப்பாகத்தெளியும்பொருட்டு [அவ்விரண்டனுள், தொழவேண்டியது இன்னது என்று குறிப்பிட்டு நிர்ணயிக்கும்பொருட்டு] ஆராய்ச்சிசெய்கிறவராய், மீளவும் ஒருவரையொருவர் (அந்த ஆத்மா, இரண்டனுள் யார்? என) வினவலாயினர்.

மீண்டும் ஆராய்ச்சிசெய்கின்ற அவர்கட்கு, ஆராய்ச்சிக்குஇடமான (ப்ராணனையும் ஆத்மாவையும்) பற்றி விசேஷமான நிச்சய முண்டாயிற்று.—எப்படி?— பல வேற்றுமையினால் வேறுபட்ட எந்தக் கருவியினால் (ஒருவன்) உணர்கின்றானோ (அது ஒன்று); அன்றியும், வேறோர்கருவியினால் உணரப்பட்ட விஷயத்தை நினைவுகூர்தலால் ஒன்

விப்ரதிபத்திநிராஸ: । தத்ர ந தாவத் யேந உபலபதே ஸ ஆத்மா பவிதுமர்ஹதி ॥

கேந வாயம் உபலபதே? இதி ॥

உச்யதே—

யேந வா சக்ஷுர்பூதேந ரூபம் பஶ்யதி; யேந வா

---

றாயுள்ள எது உணர்கின்றதோ (அஃது ஒன்று. ஆக இவ்)விரண்டு பொருள்களும் இவ்வுடம்பினுள் காணப்படுகின்றன. (இங்குக் குறிக்கப்பட்ட ப்ராணனாவது - பலவிடிவினவான கண் காது முதலிய கருவிகளின் சேர்க்கையாம். 'நான் கண்ணால் காண்கிறேன்,' 'செவியால் கேட்கிறேன்,' 'மூக்கால் முகர்கிறேன்' என்பனபோன்றவிடத்துக் கண்முதலியன உணர்தற்கருவியாயும் பலவாயும் உள்ளன; உணரும் பொருளோ ஒன்றாயுளது. எங்ஙனமெனில்,— மிக்கு அழகிய விசித்திரமான சித்திரத்தை முன்பு கண்ணால்கண்டவன், பின்பு கண்பிடுங்கப்பட்டவழி 'நான் அந்த விசித்திரமான சித்திரத்தைப் பார்த்தேன்' என நினைவுகூர்கின்றான். அவ்வண்ணமே, ஒருவன் 'எந்த நான் நேற்று இராமனைக் கண்டேனோ அந்த நானே இப்பொழுது கிருஷ்ணனைத் தொடுகின்றேன்' என நினைவுகூர்கின்றான். இராமனைக் கண்டபொருளும் கிருஷ்ணனைத் தொட்டபொருளும் வெவ்வேறாயிருக்குமளவிலே, இராமனைக் காண்டலும் கிருஷ்ணனைத் தொடுதலுமாகிய இரண்டனையும் நினைவுகூர்தல் நிகழாது; ஒருவன் அநுபவித்ததை வேறொருவன் நினைவுகூர்தலென்பதைக் காணாமையின். ஆகவே, ஒருவன் தன் உடம்பினுள் காண்கின்ற உணர்தற்கருவியும் உணரும்பொருளுமாகிய) அவற்றுள்,— எதனால் உணர்கின்றானோ அது ஆத்மாவாதல் அமையவேமாட்டாது. (மற்று, பரிசேஷப்பிரமாணத்தால், உணரும்பொருளே ஆத்மாவாம் என்க.)

(வினா) :— இனி, (ஒருவன்) எதனால் உணர்கின்றான்? என்பது.

(விடை) :— கூறுவோம் :

கண்ணாகிய எதனால் (ஒருவன்) உருவத்தைக் காண்கின்றானோ;

𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑍇𑌣𑍈𑌤𑍇𑌨 𑌶𑌬𑍍𑌦𑌮𑍍 ; 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌘𑍍𑌰𑌾𑌣𑍇𑌨𑍈-𑌤𑍇𑌨 𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍍 𑌆𑌜𑌿𑌘𑍍𑌰𑌤𑌿 ; 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌵𑌾𑌕𑍍𑌕𑌰𑌣𑍇𑌨𑍈𑌤𑍇𑌨 𑌵𑌾𑌚𑌂 𑌨𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌾𑌂 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍋𑌤𑌿 𑌗𑍌𑌃 𑌅𑌶𑍍𑌵𑌃 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌾𑌦𑍍𑌯𑌾𑌂, 𑌸𑌾𑌧𑍁 𑌅𑌸𑌾𑌧𑍁 𑌇𑌤𑌿 𑌚 ; 𑌯𑍇𑌨 𑌵𑌾 𑌜𑌿𑌹𑍍𑌵𑌯𑍈𑌤𑍇𑌨 𑌸𑍍𑌵𑌾𑌦𑍁 𑌚 𑌅𑌸𑍍𑌵𑌾𑌦𑍁 𑌚 𑌵𑌿𑌜𑌾𑌨𑌾𑌤𑌿 𑌇𑌤𑌿 ॥ ௧ ॥

𑌕𑌿𑌂 𑌪𑍁𑌨𑌃 𑌤𑌤𑍍 𑌏𑌵 𑌏𑌕𑌮𑍍 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 𑌕𑌰𑌣𑌮𑍍? 𑌇𑌤𑌿 ; 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇—

௨. 𑌯𑌦𑍇𑌤𑌦𑍍𑌧𑍃𑌦𑌯𑌂 𑌮𑌨𑌶𑍍𑌚𑍈𑌤𑌤𑍍 ॥

𑌯𑌤𑍍 𑌉𑌕𑍍𑌤𑌂 𑌪𑍁𑌰𑌸𑍍𑌤𑌾𑌤𑍍 "𑌪𑍍𑌰𑌜𑌾𑌨𑌾𑌂 𑌰𑍇𑌤𑍋 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌹𑍃𑌦𑌯𑌸𑍍𑌯 𑌰𑍇𑌤𑍋 𑌮𑌨𑍋 𑌮𑌨𑌸𑌾 𑌸𑍃𑌷𑍍𑌟𑌾 𑌆𑌪𑌶𑍍𑌚 𑌵𑌰𑍁𑌣𑌶𑍍𑌚 𑌹𑍃𑌦𑌯𑌾𑌨𑍍𑌮𑌨𑍋 𑌮𑌨𑌸𑌶𑍍𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃," 𑌤𑌤𑍍 𑌏𑌵 𑌏𑌤𑌤𑍍 𑌹𑍃𑌦𑌯𑌂 𑌮𑌨𑌃 𑌚 ; 𑌏𑌕𑌮𑍇𑌵 𑌤𑌤𑍍 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 । 𑌏𑌤𑍇𑌨 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑍇𑌨

---

அல்லது, செவியாகிய எதனால் ஓசையினைக் கேட்கின்றானோ; அல்லது, மூக்காகிய எதனால் நாற்றங்களை முகர்கின்றானோ; அல்லது, வாக்குஇந்திரியமாகிய எதனால் ஆ குதிரை என்கின்ற இவைபோன்ற பெயராகிய வார்த்தையைப் பேசுகின்றானோ, நன்று எனவும் தீது எனவும் சொல்லுகின்றானோ; அல்லது, நாக்காகிய எதனால் இனியதையும் இனியதல்லாததையும் ருசிபார்க்கின்றானோ; (அந்த இவ்விந்திரியங்களாகிய கருவியினால் உணர்கின்றான்) என்பது.

ஒன்றாகவேஇருந்து பலபடி வேறுபட்ட அக் கருவி யாது? என்பது.— கூறுவோம்:

௨. இந்த ஹிருதயமும் மனமும் எதுவோ, (அந்த) இது.

"ப்ராணிகளின் ஸாரம் ஹிருதயம்; ஹிருதயத்தின் ஸாரம் மனம்; மனத்தால் ஜலமும் வருணனும் படைக்கப்பட்டார்கள்; ஹிருதயத்தினின்று மனம்; மனத்தினின்று சந்திரன்" (என) எது முன்னர்க் கூறப்பட்டதோ, அதுவே இந்த ஹிருதயமும் மனமு மாம்; ஒன்றான இது பலவாறாக உள்ளது. கண்ணுகிறிற்கும் அகக்கருவியா

ஹநேந வக்ஷுஷா-ரூபாணி பஶ்யதி ஶ்ரோத்ரேண ஶப்தாந் ஶ்ருணோதி க்ராணேந கந்தாந் ஜிக்ரதி வாசா வததி ஜிஹ்வயா ரஸாந் விஜாநாதி மநஸா ஸங்கல்பயதி ஹ்ருதயேந அத்யவஸ்யதி ॥

தஸ்மாத் ஸர்வகரணவிஷயவ்யாபாரகம் ஏகம் இதம் கரணம் ஸர்வோபலப்தௌ உபலப்தே: । ததா ச கௌஷீதகிநாம் — "ப்ரஜ்ஞயா வாசம் ஸமாருஹ்ய வாசா ஸர்வாணி நாமாந்யாப்நோதி ப்ரஜ்ஞயா சக்ஷு: ஸமாருஹ்ய சக்ஷுஷா ஸர்வாணி ரூபாண்யாப்நோதி" இத்யாதி; வாஜஸநேயகே ச — "மநஸா ஹ்யேவ பஶ்யதி மநஸா ஶ்ருணோதி", "ஹ்ருதயேந ஹி ரூபாணி ஜாநாதி" இத்யாதி । தஸ்மாத் ஹ்ருதயமேநா-

---

கிய இஃதொன்றனலே (ஒருவன்) உருவத்தைப் பார்க்கிறன் : செவியாகிநிற்கும் அகக்கருவியாகிய இஃதொன்றனலே (ஓசையைக்) கேட்கிறன் : மூக்காகிநிற்கும் அகக்கருவியாகிய இஃதொன்றனலே (நாற்றங்களை) முகர்கிறன் : வாக்காகிநிற்கும் அகக்கருவியாகிய இஃதொன்றனலே (வார்த்தையைப்) பேசுகிறன் : நாக்காகிநிற்கும் அகக்கருவியாகிய இஃதொன்றனலே ருசிபார்க்கிறன் : தானேஎண்ணவடிவிற்றன மனமாகிநிற்கும் அகக்கருவியாகிய இஃதொன்றனலே எண்ணுகிறன் : ஹிருதயவடிவிற்றகிநிற்கும் அகக்கருவியாகிய இஃதொன்றனலே நிச்சயிக்கிறன்.

ஆதலின், எல்லாக் கருவிகளையும் விஷயங்களையும் (தனது) செயலாகக்கொண்ட இந்த ஓர் கருவியானது, உணரும்பொருள் எல்லாவற்றையும் உணர்தற்கு (ஸாதநமாம்). அவ்வாறே, "புத்தியினல் வாக்கை ஏறி, வாக்கினல் எல்லாப்பெயர்களையும் பெறுகின்றது ; புத்தியினல் கண்ணை ஏறி, கண்ணினல் எல்லா உருவங்களையும் பெறுகின்றது" (கௌஷீ - ௩ - ௬) என்பதுமுதலியன கௌஷீதகியாருடைய (சுருதியாம் ; இதற்குஇணங்க) வாஜஸநேயகத்திலுள்ளும் "மனத்தினலேயே பார்க்கிறன், மனத்தினல் கேட்கிறன்" (ப்ரு - ௧ - ௫ - ௩ ; மைத்ரீ - ௬ - ௩0), "ஹிருதயத்தினலன்றே உருவங்களை உணர்கின்

ப்ராணஸ்ய ஸர்வோபலப்திகாரணத்வம் ப்ரஸித்தம். ததா ச ப்ராண: ; "யோ வை ப்ராண: ஸா ப்ரஜ்ஞா யா வை ப்ரஜ்ஞா ஸ ப்ராண:" இதி ப்ராஹ்மணம். 'கரணஸம்ஹதிரூபஶ்ச ப்ராண:' இதி அவோசாம ப்ராணஸம்வாதாதௌ ॥

தஸ்மாத் யத் ப்ரபதாப்யாம் ப்ராபத்யத ப்ரஹ்ம உபலப்து: உபலப்திகரணத்வேன குணபூதத்வாத், ந ஸ தத் வஸ்து ப்ரஹ்மோபாஸ்யாத்மா பவிதுமர்ஹதி ॥

தஸ்மாத் பாரிஶேஷ்யாத்— யஸ்ய உபலப்து: உபலப்த்யர்தா: ஏதஸ்ய ஹ்ருதயஸ்ய மனோரூபஸ்ய கரணஸ்ய வ்ருத்தய: வக்ஷ்யமாணா:, ஸ உபலப்தா உபாஸ்ய: ஆத்மா ந: பவிதுமர்ஹதி இதி நிஶ்சயம் க்ருதவந்த: ॥ ௨ ॥

---

றுன்" (ப்ரு - ௩ - ௯ - ௨0) என்பனமுதலியன (கூறப்பட்டுள்ளன). ஆதலின், 'ஹ்ருதயம்' 'மனம்' எனப்படுவது யாவற்றையும் உணர்தற்குக் கருவியாம் என (யாவர்க்கும்)தெரிந்துளது. ப்ராணனும் அவ்வடிவிற்றும் [ஹ்ருதயமென்னும் அகக்கரணவடிவிற்றும்] ; "எதுவே ப்ராணனோ, அது புத்தியாம்; எதுவே புத்தியோ, அது ப்ராணனும்" (கௌஷீ - ௩ - ௩) என்பது ப்ராஹ்மணம். அன்றியும், "ப்ராணனென்பது இந்திரியத்தொகுதியாம்" என ப்ராணஸம்வாதம் (ப்ரு - ௬ - க - ௧௩) முதலியவற்றினுள் கூறியுள்ளோம்.

ஆகவே,— எது இரண்டுகால்நுனிகளின்வழியாக (உடம்பினுள்) புகுந்ததோ அந்த ப்ரஹ்மமானது அறியும்பொருளுக்கு அறிதற்கருவியாகித் துணையாகநிற்றலின், அப் பொருளாக ப்ரஹ்மமாகத் தொழவேண்டிய [அறியவேண்டிய] ஆத்மாவாக இருக்கவேமுடியாது.

ஆகவே பரிசேஷப்ரமாணத்தினால்,— ஹ்ருதயமாகிய மனம் என்னும் இந்த அகக்கரணத்தினுடைய இனிக்கூறப்படும் (௩ - க - ௩) வ்ருத்திகள் எந்த உணரும்பொருளினுடைய உணர்ச்சிக்கு ஆகின்றனவோ, அந்த உணரும்பொருளே நம்மால் தொழவேண்டிய ஆத்மாவாக இருத்தல்வேண்டும். என (விவேகிகள்) நிர்ணயித்தார்கள். (௨)

𑌤𑌦𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌸𑍍𑌥𑌸𑍍𑌯 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍁𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌾𑌃 𑌯𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑍋 𑌬𑌾𑌹𑍍𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌿𑌕𑌵𑌿𑌷𑌯𑌵𑌿𑌷𑌯𑌾𑌃, 𑌤𑌾 𑌇𑌮𑌾 𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇—

௫. 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌮𑍇𑌧𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌰𑍍𑌧𑍃𑌤𑌿𑌰𑍍𑌮𑌤𑌿𑌰𑍍𑌮𑌨𑍀𑌷𑌾 𑌜𑍂𑌤𑌿𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 𑌸𑌂𑌕𑌲𑍍𑌪𑌃 𑌕𑍍𑌰𑌤𑍁𑌰𑌸𑍁𑌃 𑌕𑌾𑌮𑍋 𑌵𑌶 𑌇𑌤𑌿 । 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍍𑌯𑍇𑌵𑍈𑌤𑌾𑌨𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮𑌧𑍇𑌯𑌾𑌨𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ॥

𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌂𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌃 𑌚𑍇𑌤𑌨𑌭𑌾𑌵𑌃 । 𑌆𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌾𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌃 𑌈𑌶𑍍𑌵𑌰𑌭𑌾𑌵𑌃 । 𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌕𑌲𑌾𑌦𑌿𑌪𑌰𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 । 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌤𑌾 । 𑌮𑍇𑌧𑌾 𑌗𑍍𑌰𑌨𑍍𑌥𑌧𑌾𑌰𑌣𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑍍𑌯𑌮𑍍 । 𑌦𑍃𑌷𑍍𑌟𑌿𑌃 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌦𑍍𑌵𑌾𑌰𑌾 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌷𑌯𑍋𑌪𑌲𑌬𑍍𑌧𑌿𑌃 । 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌧𑌾𑌰𑌣𑌮𑍍, 𑌅𑌵𑌸𑌨𑍍𑌨𑌾𑌨𑌾𑌂 𑌶𑌰𑍀𑌰𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌣𑌾𑌂 𑌯𑌯𑌾 𑌉𑌤𑍍𑌤𑌮𑍍𑌭𑌨𑌂 𑌭𑌵-

---

அந்த அகக்கரணமாகிய உபாதியிலேயுள்ளதாய் அறிவுவடிவிற்றான பிரஹ்மமாகிய உணரும்பொருளினுடைய உணர்ச்சிக்கு ஆகின்ற எந்த அகக்கரணவ்ருத்திகள் புறத்திலும் அகத்திலுமுள்ள பொருள்களைப் பற்றிநிற்கின்றனவோ, அந்த இவ்(வகக்கரணவ்ருத்திகள்) கூறப்படுகின்றன :

௫. ஸம்ஜ்ஞாநம், ஆஜ்ஞாநம், விஜ்ஞாநம், ப்ரஜ்ஞாநம், மேதை, பார்வை, உறுதி, மதி, மநீஷை, துயரம், நினைவு, எண்ணம், துணிபு, திறமை, காமம், வசம் என்ற இந்த எல்லாமே ப்ரஜ்ஞாநத்தின் பெயர்களாய் உள்ளன.

ஸம்ஜ்ஞாநமாவது நன்கு உணர்தல், சேதநத்தன்மை. ஆஜ்ஞாநமாவது கட்டளை, ஆளுந்தன்மை. விஜ்ஞாநமாவது கலைமுதலானவற்றின் அறிவு[அறுபத்துநான்கு கலை முதலியவற்றாலாகும் உலகஅறிவு.—ஆ.]. ப்ரஜ்ஞாநமாவது தெரிதல், தெரிந்தவனுதல்[தற்காலத்துத் தோன்றும் ப்ரதிபை.—ஆ.]. மேதையாவது நூலை மனத்தினுள் அமைத்துக்கொள்வதிலே வல்லமை. பார்வையாவது இந்திரியங்களின்வழியாக எல்லாப் பொருள்களையும் உணர்தல். அயர்ந்துகிடக்கும் உடம்பையும் இந்திரியங்களையும் எதனால் தாங்குதலாகின்றதோ, (அந்த அகக்கரண

𑌤𑌿; 𑌯𑌯𑌾 𑌶𑌰𑍀𑌰𑌾𑌦𑍀𑌨𑍍𑌯𑍁𑌤𑍍𑌤𑌭𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌇𑌤𑌿 𑌹𑌿 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 । 𑌮𑌤𑌿𑌃 𑌮𑌨𑌨𑌮𑍍; 𑌮𑌨𑍀𑌷𑌾 𑌤𑌤𑍍𑌰 𑌸𑍍𑌵𑌾𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌮𑍍 । 𑌜𑍂𑌤𑌿𑌃 𑌵𑍇𑌦𑌨𑌾 𑌰𑍋𑌗𑌾𑌦𑌿𑌦𑍁𑌃𑌖𑌿𑌤𑍍𑌵𑌭𑌾𑌵𑌃 । 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 𑌸𑍍𑌮𑌰𑌣𑌮𑍍 । 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌃 𑌶𑍁𑌕𑍍𑌲𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌦𑌿𑌭𑌾𑌵𑍇𑌨 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌨𑌂 𑌰𑍂𑌪𑌾𑌦𑍀𑌨𑌾𑌮𑍍 । 𑌕𑍍𑌰𑌤𑍁𑌃 𑌅𑌧𑍍𑌯𑌵𑌸𑌾𑌯𑌃 । 𑌅𑌸𑍁𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌨𑌾𑌦𑌿𑌜𑍀𑌵𑌨𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌨𑌿𑌮𑌿𑌤𑍍𑌤𑌾 𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 । 𑌕𑌾𑌮𑌃 𑌅𑌸𑌨𑍍𑌨𑌿𑌹𑌿𑌤𑌵𑌿𑌷𑌯𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌾 𑌤𑍃𑌷𑍍𑌣𑌾 । 𑌵𑌶𑌃 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌵𑍍𑌯𑌤𑌿𑌕𑌰𑌾𑌦𑍍𑌯𑌭𑌿𑌲𑌾𑌷𑌃 । 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵𑌮𑌾𑌦𑍍𑌯𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍁𑌃 𑌉𑌪𑌲𑌬𑍍𑌧𑍍𑌯𑌰𑍍𑌥𑌤𑍍𑌵𑌾𑌤𑍍, 𑌶𑍁𑌦𑍍𑌧𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑍂𑌪𑌸𑍍𑌯 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 𑌉𑌪𑌾𑌧𑌿𑌭𑍂𑌤𑌾𑌃 𑌤𑌦𑍁𑌪𑌾𑌧𑌿𑌜𑌨𑌿𑌤𑌗𑍁𑌣𑌨𑌾𑌮𑌧𑍇𑌯𑌾𑌨𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 । 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌦𑍀𑌨𑌿 𑌸𑌰𑍍𑌵𑌾𑌣𑍍𑌯𑍇𑌵 𑌏𑌤𑌾𑌨𑌿 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌮𑌾𑌤𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌨𑌾𑌮𑌧𑍇𑌯𑌾𑌨𑌿 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿, 𑌨 𑌸𑍍𑌵𑌤𑌃

---

வ்ருத்தி) உறுதி என்பது; 'உறுதியினலன்றோ (ப்ராணிகள்) உடம்பைத் தாங்குகின்றன' என்று (ஜனங்கள்) கூறுகிறார்கள். மதியாவது நினைத்தல்[அரசன்கார்யம் முதலியவற்றை ஆலோசித்தல்.—வி.]. மநீஷையாவது அதிலே ஸ்வதந்திரமாயிருத்தல்[அக்கார்யங்களை ஸ்வதந்திரமாய் ஆலோசித்தல்].' துயரமாவது பிணிமுதலியவற்றால் மனத்திற்குத் துன்பமுடைமை. நினைவாவது (அநுபவித்ததை) நினைவுகூர்தல். எண்ணமாவது உருவம்முதலியவற்றை வெண்மையாக கருமையாக இன்னுமிவைபோன்றவையாகச் செவ்வனேகொள்ளுதல். துணிபாவது ('அவச்யம் செய்வேன்' என்னும்) நிச்சயம். திறமையாவது மூச்சுவிடுதல்முதலான வாழ்க்கையைக் கொண்டுசெலுத்தல்காரணமாகவரும் பிழைப்புத்தொழில். காமமாவது எதிரில்இல்லாத பொருளை விரும்புதல், அவாவுதல். வசமாவது ஸ்திரீயின்சேர்க்கை முதலியவற்றை வேண்டுதல். இத்தன்மையனமுதலான அகக்கரணவ்ருத்திகள் அறிவுமாத்திரமான உணரும்பொருளினுடைய உணர்ச்சிக்குக் கருவியாயிருத்தலின், தனிஅறிவாகிய ப்ரஹ்மத்தின் உபாதிகளாய் அவ்வுபாதிகளாலான வடிவின் பெயர்களாய் உள்ளன. (ஆகவே, உபசாரவழக்கினுலே) ஸம்ஜ்ஞானம்முதலிய இந்த(வ்ருத்திகள்)எல்லாமே, அறிவுமாத்திரமான ப்ரஜ்ஞானத்தின்[தனிஆத்மாவின்] பெயர்களாகின்றன; தாமே நேராக

ஸாக்ஷாத் । தயா ச உக்தம்— "ப்ராணந்நேவ ப்ராணோ நாம ஭வதி" இத்யாதி ॥ ௩ ॥

௪. ஏஷ ப்ரஹ்மைஷ இந்த்ர ஏஷ ப்ரஜாபதிரேதே ஸர்வே தேவா இமானி ச பஞ்ச மஹாபூதானி ப்ருதிவீ வாயுராகாஶ ஆபோ ஜ்யோதீம்ஷீத்யேதானீமானி ச க்ஷுத்ரமிஶ்ராணீவ । பீஜானீதராணி சேதராணி சாண்டஜானி ச ஜாருஜானி ச ஸ்வேதஜானி சோத்பிஜ்ஜானி சாஶ்வா காவ: புருஷா ஹஸ்தினோ யத்கிஞ்சேதம் ப்ராணி ஜங்கமம் ச பதத்-

அல்ல. அவ்வண்ணமே, "(ஆத்மா) மூச்சுவிடுகின்றதேயாகி ப்ராணன் என்னும் பெயரை யுடையதாகின்றது" (ப்ரு - ௧ - ௪ - ௭) எனவும் பிறவும் கூறப்பட்டுள்ளன. (௩)

(இவ்வாறு, "எதனுல் பார்க்கின்றுமோ" [௩ - ௧ - ௧] என்பதுமுதலாக "பெயர்களாய் உள்ளன" [௩ - ௧ - ௩] என்பதுஈறுகவுள்ள நூலினுல் - 'எல்லா இந்திரியங்கட்கும் அவற்றினது வ்ருத்திகட்கும் வேறுய்த் தானேவிளங்குவதாய் ஸகலத்திற்கும் ஸாக்ஷியாய் எல்லா வ்ருத்திகளோடும் தொடர்ந்துநிற்பது ஒரே ஆத்மா' எனச் சோதனை செய்யப் பட்டது. இனி, இவ்வாறு சோதிக்கப்பட்ட ஆத்மா உடம்புதோறும் வெவ்வேறுதலை விலக்கும்பொருட்டு, "இது ப்ரஹ்மா, இது இந்திரன்" [௩ - ௧ - ௪] எனத்தொடங்கும் வாக்கியம் எழுகின்றது :—ஆ.)

௪. இது ப்ரஹ்மா, இது இந்திரன், இது ப்ரஜாபதி, (இது) இந்த எல்லா தேவர்கள்.

ப்ரஹ்ம ஆராய்ச்சி.

இனி, இந்த மகாபூதங்கள் ஐந்து : இவை, நிலம் வாயு ஆகாசம் நீர் நெருப்பு என்பன. அன்றியும், இவை அற்பங்களோடுகூடியவையாய் விதையா(யுள்ளன. இவ் விதைகள்) வெவ்வேறனவை : முட்டையிற் பிறப்பவை, பையிற் பிறப்பவை, வியர்வையிற் பிறப்பவை, (நிலத்தைப்)பிளந்து பிறப்பவை, குதிரைகள், ஆக்கள், மனிதர்கள், யானைகள், இன்னும் எது இந்த ஜந்துவோ ஜங்கமமோ பறவையோ, மற்றும் எது ஸ்தாவரமோ— அஃதெல்லாம் அறிவை நேத்ரமாகவுடையது,

**𑌤𑍍𑌰 𑌚 𑌯𑌚𑍍𑌚 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑍋 𑌲𑍋𑌕𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 ॥**

𑌸 𑌏𑌷 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌰𑍂𑌪 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌅𑌪𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌮𑌾 𑌅𑌨𑍍𑌤𑌃𑌕𑌰𑌣𑍋𑌪𑌾𑌧𑌿𑌷𑍍𑌵𑌨𑍁𑌪𑍍𑌰𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 𑌜𑌲𑌭𑍇𑌦𑌗𑌤𑌸𑍂𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌿𑌮𑍍𑌬𑌵𑌤𑍍, 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌮𑌾 । 𑌏𑌷 𑌏𑌵 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌃 𑌗𑍁𑌣𑌾𑌤𑍍; 𑌦𑍇𑌵𑌰𑌾𑌜𑍋 𑌵𑌾 । 𑌏𑌷 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃; 𑌯𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑌜𑌃 𑌶𑌰𑍀𑌰𑍀, 𑌯𑌤𑍋 𑌮𑍁𑌖𑌾𑌦𑌿𑌨𑌿𑌰𑍍𑌭𑍇𑌦𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌣 𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑌯𑍋 𑌲𑍋𑌕𑌪𑌾𑌲𑌾𑌃 𑌜𑌾𑌤𑌾𑌃, 𑌸 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌃 𑌏𑌷 𑌏𑌵 । 𑌯𑍇𑌽𑌪𑌿 𑌏𑌤𑍇 𑌅𑌗𑍍𑌨𑍍𑌯𑌾𑌦𑌯𑌃 𑌸𑌰𑍍𑌵𑍇 𑌦𑍇𑌵𑌾𑌃 𑌏𑌷 𑌏𑌵 ॥

---

அறிவிலே தங்கியுளது. ஜகத்து அறிவையே நேத்ரமாகக்கொண்டது. அறிவென்பது தங்குமிடம்.

**ஆத்மாவும் ப்ரஹ்மமும் ஒரேபொருள்.**

அறிவென்பது ப்ரஹ்மம்.

**ஆத்மஆராய்ச்சியின் தொடர்ச்சி.**

*இது - அறிவுவடிவிற்றான ஆத்மா. அந்த(இவ்வாத்மாவே) - அபர ப்ரஹ்மமாய், எல்லா உடம்பினுள்ளும் உள்ள ப்ராணனாய்[கிரியாசக்தியினை யுடையதாய்], ப்ரஜ்ஞாத்மாவாய்[ஞானசக்தியினை யுடையதாய்], பலஜலங்களுள்ளே சென்றுநிற்கும் சூரியப்பிரதிபிம்பம்போல அகக்கரணமாகிய உபாதிகளுள் புகுந்துள்ளதாய், ஹிரண்யகர்ப்பனாய், ப்ராணனாய் ப்ரஜ்ஞாத்மாவாய் [ப்ராணன் எனவும் ப்ரஜ்ஞாத்மா எனவும் ஆங்காங்குக்கூறப்படுவதாய்]உளது. குணத்தினால், இதேதான் இந்திரன்; ["இதனைக் கண்டிருக்கிறேன்" என்னும் சுருதியினால் உரைக்கப்பட்ட இந்திரகுணத்தின் ஸம்பந்தத்தினால், இவ்வாத்மாவே இந்திரன் என்க. க-ந-கங, கச ஐப்பார்க்க.—ஆ.] இது ப்ரஜாபதி; எது முதலில் தோன்றி உடம்பொடுநிற்பதோ, எதனின்று வாய்முதலான துவாரங்களின்வழியாக அக்நிமுதலான லோகபாலர்கள் தோன்றினரோ, அந்த ப்ரஜாபதி இதுவே. மேலும், இந்த அக்நிமுதலானோர்கள் எவரோ, (அந்த) எல்லா தேவர்களும் இதுவே.*

𑌇𑌮𑌾𑌨𑌿 𑌚 𑌸𑌰𑍍𑌵𑌶𑌰𑍀𑌰𑍋𑌪𑌾𑌦𑌾𑌨𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌪𑍃𑌥𑌿-
𑌵𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌅𑌨𑍍𑌨𑌾𑌨𑍍𑌨𑌾𑌦𑌤𑍍𑌵𑌲𑌕𑍍𑌷𑌣𑌾𑌨𑌿 𑌉𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 । 𑌕𑌿𑌞𑍍𑌚
𑌇𑌮𑌾𑌨𑌿 𑌚 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌣𑌿 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑍈𑌃 𑌸𑌰𑍍𑌪𑌾𑌦𑌿𑌭𑌿𑌃 𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌣𑌿—
𑌇𑌵𑌶𑌬𑍍𑌦𑌃 𑌅𑌨𑌰𑍍𑌥𑌕𑌃— 𑌸𑌰𑍍𑌪𑌾𑌦𑍀𑌨𑌿 𑌬𑍀𑌜𑌾𑌨𑌿 𑌕𑌾𑌰𑌣𑌾𑌨𑌿 𑌇𑌤-
𑌰𑌾𑌣𑌿 𑌚 𑌇𑌤𑌰𑌾𑌣𑌿 𑌚 𑌦𑍍𑌵𑍈𑌰𑌾𑌶𑍍𑌯𑍇𑌨 𑌨𑌿𑌰𑍍𑌦𑌿𑌶𑍍𑌯𑌮𑌾𑌨𑌾𑌨𑌿 ।
𑌕𑌾𑌨𑌿 𑌤𑌾𑌨𑌿?—𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇— 𑌅𑌣𑍍𑌡𑌜𑌾𑌨𑌿 𑌪𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿; 𑌜𑌾𑌰𑍁𑌜𑌾𑌨𑌿
𑌜𑌰𑌾𑌯𑍁𑌜𑌾𑌨𑌿 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑍀𑌨𑌿; 𑌸𑍍𑌵𑍇𑌦𑌜𑌾𑌨𑌿 𑌯𑍂𑌕𑌾𑌦𑍀𑌨𑌿; 𑌉𑌦𑍍𑌭𑌿𑌜𑍍𑌜𑌾𑌨𑌿
𑌚 𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌦𑍀𑌨𑌿; 𑌅𑌶𑍍𑌵𑌾 𑌗𑌾𑌵𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌃; 𑌅𑌨𑍍𑌯𑌚𑍍𑌚
𑌯𑌤𑍍 𑌕𑌿𑌞𑍍𑌚 𑌇𑌦𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌜𑌾𑌤𑌮𑍍,— 𑌕𑌿𑌂 𑌤𑌤𑍍? — 𑌜𑌙𑍍𑌗𑌮𑌂 𑌯𑌤𑍍
𑌚𑌲𑌤𑌿 𑌪𑌦𑍍𑌭𑍍𑌯𑌾𑌂 𑌗𑌚𑍍𑌛𑌤𑌿, 𑌯𑌤𑍍 𑌚 𑌪𑌤𑌤𑍍𑌰𑌿 𑌆𑌕𑌾𑌶𑍇𑌨 𑌪𑌤𑌨𑌶𑍀-
𑌲𑌮𑍍, 𑌯𑌤𑍍 𑌚 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌮𑍍 𑌅𑌚𑌲𑌮𑍍 । 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌤𑌤𑍍 𑌅𑌶𑍇𑌷𑌤𑌃
𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍; 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌪𑍍𑌤𑌿𑌃 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾, 𑌸𑌾 𑌚 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌸𑌦𑍈𑌵—

---

இனி, எல்லா உடம்புகட்கும் உபாதாநகாரணமான நிலம் முதலிய
மகாபூதங்கள் ஐந்து ; இவை உணவாகியும், உணவை யுண்பவையாகியும்
உள்ளன (சஅ - ஆம் பக்கத்து பாஷ்யத்தைப்
பார்க்க).— இவ என்னும் சொல்லுக்கு, (இங்கு)
அர்த்தமில்லை.— அன்றியும், இப் பாம்புமுதலி
யன அற்ப(உடல்களோடு) கூடியவையாய்,(தம்

ப்ரஹ்மஆராய்ச்சி.

தம் இனத்திற்குஉரிய அந்தந்த உடம்புகட்குக்) காரணமாகி, வெவ்
வேறானவையாய் (ஜங்கமம் ஸ்தாவரம் என்னும்)இருபகுப்பாகக் குறி
த்துக்காட்டப்படுகின்றன.— அவை யாவை? — கூறுவோம் :— முட்டை
யிற் பிறக்கும் பக்ஷிமுதலியன : பையிற் பிறக்கும் மனிதர்முதலியன :
வியர்வையிற் பிறக்கும் பேன்முதலியன : (நிலத்தைப்) பிளந்து பிறக்
கும் மரம்முதலியன : குதிரைகள், ஆக்கள், மனிதர்கள், யானைகள் :
இன்னும் வேறான இப் பிராணியெல்லாம் எதுவோ,— அது யாது? —
ஜங்கமம், எது இரண்டுகால்களால் நடக்கின்றதோ (அது) ; பறவை, எது
ஆகாசத்திலே பறக்குந்தன்மைத்தோ (அது) ; ஸ்தாவரம், எது அசை
யாததோ (அது. ஐந்துமகாபூதங்கள்முதலாக ஸ்தாவரம்ஈறாகவுள்ள)
அவையெல்லாம் அறிவையே நேத்ரமாகக்கொண்டவை. அறிதலென்
பது அறிவு. அதுவோ ப்ரஹ்மமேதான். — இதனால் நடத்தப்படுகின்

𑌨𑍀𑌯𑌤𑍇 𑌅𑌨𑍇𑌨 𑌇𑌤𑌿 𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍— 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌏𑌵 𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 𑌯𑌸𑍍𑌯 𑌤𑌤𑍍 𑌇𑌦𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑌮𑍍; 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌿 𑌉𑌤𑍍𑌪𑌤𑍍𑌤𑌿𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌲𑌯𑌕𑌾𑌲𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌶𑍍𑌰𑌯𑌮𑍍 𑌇𑌤𑌿 𑌅𑌰𑍍𑌥𑌃। 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑍋 𑌲𑍋𑌕𑌃 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵; 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵 𑌏𑌵 𑌲𑍋𑌕𑌃। 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌜𑌗𑌤𑌃॥

𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮॥

---

றது என நேத்ரம்[எதனல் ஒன்று செலுத்தப்படுகின்றதோ, அது நேத்ரம்].— எதற்கு அறிவே நேத்ரமாயுளதோ அந்த இது ப்ரஜ்ஞாநேத்ரமாம், ப்ரஜ்ஞையையே நேத்ரமாகவுடையதாம்; பிறத்தல் நிலைத்தல் அழிதல்(என்றமுக்)காலத்தும் அறிவாகிய ப்ரஹ்மத்திலே நிலைத்ததாம், அறிவையே இருப்பிடமாகக்கொண்டதாம் என்பது பொருள். ப்ரபஞ்சம் அறிவையே நேத்ரமாகவுடைத்து; முன்போல (இதற்கு உரைத்துக்கொள்க). அல்லது, எல்லா ப்ரபஞ்சமுமே அறிவையே கண்ணகக் கொண்டது(என உரைக்க. இங்கு, நேத்ரம் என்னும் சொற்கு, கண் என்று பொருள். ஸகலமும் விளங்குதற்கு அறிவே காரணம் என்பதாம். மற்றும், பாம்பிற்குக் கயிறு முடிவுஇடமா யிருப்பதுபோல,) ஜகமனைத்திற்கும் அறிவு முடிவிடமாம்.

**ஜீவனும் ப்ரஹ்மமும் ஓரேபோருள்.**

ஆகவே, அறிவு(என்னும் உள்ளேயுள்ள ஆத்மா) ப்ரஹ்மமாம் (என்க. "இந்த ஆத்மா யார்?"[ந - க - க]என்பதுமுதல் "இந்த எல்லா தேவர்கள்"[ந - க - ச]என்பதளவுமுள்ள அவாந்தரவாக்யம் த்வம்பதப்பொருளையும், "இனி, இந்த மகாபூதங்கள்"[ந - க - ச]என்பதுமுதல் "தங்குமிடம்"[ந - க - ச] என்பதளவுமுள்ள அவாந்தரவாக்யம் தத்பதப் பொருளையும் சோதித்துவைக்க,— "அறிவென்பது ப்ரஹ்மம்"[ந - க - ச]என்னும் மகாவாக்யமானது, அவையிரண்டும் ஒன்ருயிருத்தலை உணர்த்துகின்றது. நான்என்னும்எண்ணத்திஞல் குறிக்கப்படும் அறிவை ஜீவன் எனவும், ஜகத்திற்குக் காரணமாகக் குறிக்கப்படும் அறிவை ப்ரஹ்மம் எனவும் வழங்குகின்றமையால் - அவ்விரண்டிற்கும் வழங்குதல்மாத்திரமானவேற்றுமையேயன்றி உண்மையிலே ஒருசிறிதும் வேற்றுமையென்பது இல்லையேஇல்லை. என்பது தெளிந்த கருத்து).

𑌤𑌦𑍍 𑌏𑌤𑌤𑍍 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌸𑍍𑌤𑌮𑌿𑌤𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌵𑌿𑌶𑍇𑌷𑌂 𑌸𑌤𑍍 𑌨𑌿𑌰𑌂𑌜𑌨𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌂 𑌨𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌶𑌾𑌨𑍍𑌤𑌮𑍍 𑌏𑌕𑌮𑍍 𑌅𑌦𑍍𑌵𑌯𑌂 '𑌨𑍇𑌤𑌿 𑌨𑍇𑌤𑌿' 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌪𑍋𑌹𑌸𑌂𑌵𑍇𑌦𑍍𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌶𑌬𑍍𑌦𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌯𑌾𑌗𑍋𑌚𑌰𑌮𑍍 । 𑌤𑌦𑍍 𑌅𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑍋𑌪𑌾𑌧𑌿𑌸𑌮𑍍𑌬𑌨𑍍𑌧𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌮𑍍 𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑌂𑌜𑍍𑌞𑌂 𑌭𑌵𑌤𑌿; 𑌸𑌰𑍍𑌵𑌸𑌾𑌧𑌾𑌰𑌣𑌾𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌜𑌗𑌦𑍍𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌂 𑌨𑌿𑌯𑌨𑍍𑌤𑍃 𑌅𑌨𑍍𑌤𑌰𑍍𑌯𑌾𑌮𑌿𑌸𑌂𑌜𑍍𑌞𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑍍 𑌏𑌵 𑌵𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑌜𑌗𑌦𑍍𑌬𑍀𑌜𑌭𑍂𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌸𑌂𑌜𑍍𑌞𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑍍 𑌏𑌵 𑌅𑌨𑍍𑌤𑌰𑌣𑍍𑌡𑍋𑌦𑍍𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌥𑌮𑌶𑌰𑍀𑌰𑍋𑌪𑌾𑌧𑌿𑌮𑌤𑍍 𑌵𑌿𑌰𑌾𑌟𑍍𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌸𑌂𑌜𑍍𑌞𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌦𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌾𑌗𑍍𑌨𑍍𑌯𑌾-

---

## இதனால் வந்த பொருள்.

அந்த இது உபாதிகளாலான வேற்றுமையெல்லாம் இல்லாமற்போனதாகிக் குற்றம்நீங்கியதாய், அழுக்குஅகன்றதாய், கிரியையில்லதாய், சாந்தமாய்[திருப்தியுற்றதாய், பரமாநந்தமாய்—ஆ.], ஒன்றாய், இரண்டில்லதாய்[வேற்றுமையற்றதாய்], "அப்படியன்று, அப்படியன்று" என வேற்றுமையாவற்றையும் நீக்குதல்வழியாக நன்குஅறியப்படுவதாய், எத்தகைய சொல்லுக்கும் எத்தகைய எண்ணத்திற்கும் எட்டாததாய் இருக்கின்றது. அது, மிகப் பரிசுத்தமான ஞானமாகிய(மு - ௧ - ௧ - ௯; ப்ரஹ் - ரத்ந - ௧ - ௧ - ௫) உபாதியின் ஒட்டினாலே அனைத்தையும் அறிவதாய் ஈச்வரன் என்னும் பெயரை யுடையதாகின்றது; (ஹிரண்யகர்ப்பன் முதலான)யாவற்றிற்கும் பொதுவான வெளிப்படாத ஜகத்தின் விதையை வியாபரிக்க[முளைக்க]ப்பண்ணுவதாகி (ஸகலத்தையும்) நியமிப்பதாய் அந்தர்யாமி என்னும் பெயரை யுடையதாகின்றது. அதுவே, வெளிப்பட்ட ஜகத்தின் காரணமான புத்தியின்மேல் தான்என்னும்எண்ணத்தையே உபாதியாகக்கொண்டதாய் ஹிரண்யகர்ப்பன்என்னும் பெயரை யுடையதாகின்றது. அதுவே, அண்டத்தினுடைய உள்ளேயிருந்து தோன்றிய முதல் உடம்பையே உபாதியாகக்கொண்டதாய் விராட் என்னும் பெயரையும் ப்ராஜாபதி என்னும் பெயரையும் உடையதாகின்றது; அதனினின்றும்[அண்டத்தினின்றும்] தோன்றிய அக்நிமுதலியவற்றையே உபாதியாகக்கொண்டதாய் (அக்நிதேவதை

𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌶𑍍𑌚 𑌦𑍇𑌵𑌤𑌾𑌸𑌂𑌜𑍍𑌞𑌂 𑌭𑌵𑌤𑌿 । 𑌤𑌥𑌾 𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌶𑍍𑌰𑌯𑍋𑌪𑌾𑌧𑌿𑌷𑍍𑌵𑌪𑌿 । 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌦𑌿𑌸𑍍𑌤𑌮𑍍𑌬𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑍇𑌷𑍁 𑌤𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌮𑌰𑍂𑌪𑌲𑌾𑌭𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃 । 𑌤𑌦𑍇𑌵 𑌏𑌕𑌂 𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌾𑌧𑌿𑌭𑍇𑌦𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑍈𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌭𑌿𑌃 𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑍈𑌶𑍍𑌚 𑌸𑌰𑍍𑌵𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑍇𑌣 𑌜𑍍𑌞𑌾𑌯𑌤𑍇 𑌵𑌿𑌕𑌲𑍍𑌪𑍍𑌯𑌤𑍇 𑌚 𑌅𑌨𑍇𑌕𑌧𑌾 ।

"𑌏𑌤𑌮𑍇𑌕𑍇 𑌵𑌦𑌨𑍍𑌤𑍍𑌯𑌗𑍍𑌨𑌿𑌂 𑌮𑌨𑍁𑌮𑌨𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌜𑌾𑌪𑌤𑌿𑌮𑍍 ।
𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑍇𑌕𑍇𑌽𑌪𑌰𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌮𑌪𑌰𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ॥"

𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌾 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌃 ॥ ௪ ॥

**௫. 𑌸 𑌏𑌤𑍇𑌨 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑍇𑌨𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌨𑌾𑌽𑌸𑍍𑌮𑌾𑌲𑍍𑌲𑍋𑌕𑌾𑌦𑍁𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯𑌾𑌮𑍁𑌷𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑌾𑌪𑍍𑌤𑍍𑌵𑌾𑌽𑌮𑍃𑌤𑌃 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 ॥**

**𑌇𑌤𑌿 𑌐𑌤𑌰𑍇𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑌿 𑌤𑍃𑌤𑍀𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌖𑌣𑍍𑌡𑌃 ॥**

---

*வாயுதேவதை என) தேவதை என்னும் பெயரை யுடையதாகின்றது. அவ்வண்ணமே, வேறுவேறு உடம்புகளாகிய உபாதிகளிலேயும் (அந்தந்தப் பெயரைப் பெறுகின்றது. இவ்வாறாக,) ப்ரஹ்மமானது ப்ரஹ்மா முதல் புல்ஈறாகவுள்ளவற்றிலே அந்தந்தப் பெயரையும் உருவத்தையும் அடைதலாகின்றது. அஃதொன்றே, ஓரோர் உபாதியினுடைய வேற்றுமையினாலே வேறுபட்டதாய் ஸகல ப்ராணிகளாலும் பரீக்ஷகர்களாலும் ஓரோர்விதமாக அறியப்படுகின்றது, பலபடியாகவும் வேறுவேறு கொள்ளப்படுகின்றது. "ஒருவர் இதனை அக்நியாகவும், மற்றொருவர் மநுப்ராஜாபதியாகவும், இன்னொருவர் இந்திரனாகவும், வேறொருவர் ப்ராணனாகவும், மற்றையோர் என்றுமுள்ள ப்ரஹ்மமாகவும் கூறுகிறார்கள்" என்பதுமுதலான ஸ்மிருதி(ப்ரமாணத்தையும் அறிக).* (௪)

மெய்யுணர்வின் பயன்.

௫. அவன் இந்த அறிவான ஆத்மாவாக இவ்வுலகினின்றும் கிளம்பி, இந்த ஸ்வர்க்கலோகத்திலே வேண்டியவற்றையெல்லாம் பெற்று, சாகாதவனாயினன் (சாகாதவ)னாயினன்.

ஐதரேயஉபநிஷத்திலே மூன்றும் அத்தியாயத்தினுள் முதற் பிரிவு முற்றும்.

𑌇𑌤𑌿 𑌐𑌤𑌰𑍇𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑌿 𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

𑌸 𑌵𑌾𑌮𑌦𑍇𑌵𑌃 𑌅𑌨𑍍𑌯𑍋 𑌵𑌾 𑌏𑌵𑌂 𑌯𑌥𑍋𑌕𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑍇𑌦 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾, 𑌯𑍇𑌨 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 𑌪𑍂𑌰𑍍𑌵𑍇 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑌃 𑌅𑌮𑍃𑌤𑌾 𑌅𑌭𑍂𑌵𑌨𑍍 । 𑌤𑌥𑌾 𑌅𑌯𑌮𑍍 𑌅𑌪𑌿 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌏𑌤𑍇𑌨 𑌏𑌵 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑍇𑌨 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾— "𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯" 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑌿 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌮𑍍— 𑌅𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌲𑍋𑌕𑌾𑌤𑍍 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 𑌅𑌮𑍁𑌷𑍍𑌮𑌿𑌨𑍍 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 𑌲𑍋𑌕𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌆𑌪𑍍𑌤𑍍𑌵𑌾 𑌅𑌮𑍃𑌤𑌃 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 𑌇𑌤𑌿 𑌓𑌮𑍍 𑌇𑌤𑌿 ॥ ௫ ॥

𑌇𑌤𑌿 𑌐𑌤𑌰𑍇𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌤𑍃𑌤𑍀𑌯𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇
𑌪𑍍𑌰𑌥𑌮𑌃 𑌖𑌣𑍍𑌡𑌃 ॥

𑌇𑌤𑌿 𑌐𑌤𑌰𑍇𑌯𑍋𑌪𑌨𑌿𑌷𑌦𑍍𑌭𑌾𑌷𑍍𑌯𑍇 𑌤𑍃𑌤𑍀𑌯𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

ஐதரேயஉபநிஷத்திலே மூன்றும் அத்தியாயம் முடிந்தது.

முன்னோர்கள் எதே அறிவான ஆத்மாவாக (ப்ரஹ்மத்தை) அறிந்தவராய் சாகாதவ ராயினோரோ, (அதே)அறிவான ஆத்மாவாக வாமதேவனாயினும் வேறொருவனாயினும் கீழ்உணர்த்தப்பட்ட ப்ரஹ்மத்தை இவ்வாறு அறிகிறன்[அறிந்தான், சாகாதவ னாயினன்]. அப்படியே, இ(ப்பொழுதுள்ள)வனும் இதே அறிவான ஆத்மாவாக (ப்ரஹ்மத்தை) அறிபவனாய், இவ்வுலகினின்றும் கிளம்பி இந்த ஸ்வர்க்கலோகத்திலே வேண்டியவற்றையெல்லாம் அடைந்து சாகாதவ னாயினன்[சாகாதவனாகிறன்].— ஓம். (௫)

ஐதரேயஉபநிஷத்பாஷ்யத்திலே மூன்றும் அத்தியாயத்தில்
முதல் பிரிவு முற்றும்.

ஐதரேயஉபநிஷத்பாஷ்யத்திலே மூன்றும் அத்தியாயம் முடிந்தது.

---

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.
ஓம் தத் ஸத்.

---

## மூன்றாம் அத்தியாயம்.

### முதல் பிரிவு.

#### பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑍐 | ஓம். |
| 𑌕𑍋𑌽𑌯𑌂 | இந்த |
| 𑌆𑌤𑍍𑌮𑌾 | ஆத்மா |
| 𑌕𑌃 | யார் |
| 𑌇𑌤𑌿 | என |
| 𑌵𑌯𑌂 | நாம் |
| 𑌉𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇 | தொழுகின்றோம் ? |
| 𑌸𑌃 | அந்த |
| 𑌆𑌤𑍍𑌮𑌾 | ஆத்மா |
| 𑌕𑌤𑌰𑌃 | இரண்டனுள் யார் ? |
| (𑌕𑌶𑍍𑌚) | (ஒருவன்) |
| 𑌯𑍇𑌨 𑌵𑌾 | எதனால் |
| (𑌰𑍂𑌪𑌂) | (உருவத்தை) |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | பார்க்கின்றானோ |
| (𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂) | (அதுவா ?) |
| 𑌵𑌾 | அல்லது |
| 𑌯𑍇𑌨 | எதனால் |
| (𑌶𑌬𑍍𑌦𑌂) | (ஓசையை) |
| 𑌶𑍃𑌣𑍋𑌤𑌿 | கேட்கின்றானோ |
| (𑌤𑌤𑍍 𑌕𑌿𑌂) | (அதுவா ?) |
| 𑌵𑌾 | அல்லது |
| 𑌯𑍇𑌨 | எதனால் |
| 𑌗𑌨𑍍𑌧𑌾𑌨𑍍 | நாற்றங்களை |

ஜிக்⁴ரதி
(தத் கிம்)
வா
யேந
வாசம்
வ்யாகரோதி
(தத் கிம்)
வா
யேந
ஸ்வாது³ ச
அஸ்வாது³ ச
விஜாநாதி
(தத் கிம்)

முகர்கின்றானோ
(அதுவா ?)
அல்லது
எதனால்
வார்த்தையை
பேசுகின்றானோ
(அதுவா ?)
அல்லது
எதனால்
இனியதையும்
இனியதல்லாததையும்
உணர்கின்றானோ
(அதுவா ?)

---

உ.

ஏதத்
ஹ்ருத³யம்
மநஃ ச
யத்
(ப⁴வதி)
(தத்)
ஏதத்
(ப⁴வதி)

இந்த
ஹிருதயமும்
மனமும்
எதுவாக
(இருக்கின்றதோ)
(அது)
இதுவாக
(உளது.)

---

௩.

ஸம்ஜ்ஞாநம்
ஆஜ்ஞாநம்
விஜ்ஞாநம்
ப்ரஜ்ஞாநம்

ஸம்ஜ்ஞானம்
ஆஜ்ஞானம்
விஜ்ஞானம்
ப்ரஜ்ஞானம்

| | |
|---|---|
| மேதா | மேதை |
| த்ருஷ்டி: | பார்வை |
| த்ருதி: | உறுதி |
| மதி: | மதி |
| மநீஷா | மநீஷை |
| ஜூதி: | துயரம் |
| ஸ்ம்ருதி: | நினைவு |
| ஸங்கல்ப: | எண்ணம் |
| க்ரது: | துணிபு |
| அஸு: | திறமை |
| காம: | காமம் |
| வஶ: | வசம் |
| இதி | என்ற |
| ஏதாநி | இவை |
| ஸர்வாணி ஏவ | எல்லாமே |
| ப்ரஜ்ஞாநஸ்ய | ப்ரஜ்ஞாநத்தின் |
| நாமதேயாநி | பெயர்கள் |
| பவந்தி | ஆகின்றன. |

௩.

| | |
|---|---|
| ஏஷ: | இது |
| ப்ரஹ்மா | ப்ரஹ்மாவாக |
| (பவதி) | (இருக்கின்றது.) |
| ஏஷ: | இது |
| இந்த்ர: | இந்திரனாக |
| (பவதி) | (இருக்கின்றது.) |
| ஏஷ: | இது |
| ப்ரஜாபதி: | ப்ரஜாபதியாக |
| ஏதே | இந்த |
| ஸர்வே | எல்லா |

| | |
|---|---|
| 𑌦𑍇𑌵𑌾𑌃 | தேவர்களாக |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கின்றது.) |
| 𑌚 | இனி |
| 𑌇𑌮𑌾𑌨𑌿 | இந்த |
| 𑌮𑌹𑌾𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 | மகாபூதங்கள் |
| 𑌪𑌂𑌚 | ஐந்தாக |
| (𑌸𑌨𑍍𑌤𑌿) | (உள்ளன.) |
| 𑌏𑌤𑌾𑌨𑌿 | இவை |
| 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀 | நிலம் |
| 𑌵𑌾𑌯𑍁𑌃 | வாயு |
| 𑌆𑌕𑌾𑌶𑌃 | ஆகாசம் |
| 𑌆𑌪𑌃 | ஜலம் |
| 𑌜𑍍𑌯𑍋𑌤𑍀𑌂𑌷𑌿 | நெருப்பு |
| 𑌇𑌤𑌿 | என |
| (𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇) | (கூறப்படுகின்றன.) |
| 𑌚 | அன்றியும் |
| 𑌇𑌮𑌾𑌨𑌿 | இவை |
| 𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌣𑌿 𑌇𑌵 | அற்பங்களோடு கூடியவையாய் |
| 𑌬𑍀𑌜𑌾𑌨𑌿 | விதைகளாய் |
| 𑌇𑌤𑌰𑌾𑌣𑌿 𑌚 | வேறானவையாய் |
| 𑌇𑌤𑌰𑌾𑌣𑌿 𑌚 | வேறானவையாய் |
| (𑌸𑌨𑍍𑌤𑌿) | (இருக்கின்றன.) |
| 𑌅𑌣𑍍𑌡𑌜𑌾𑌨𑌿 𑌚 | முட்டையிற் பிறப்பவை |
| 𑌜𑌾𑌰𑍁𑌜𑌾𑌨𑌿 𑌚 | பையிற் பிறப்பவை |
| 𑌸𑍍𑌵𑍇𑌦𑌜𑌾𑌨𑌿 𑌚 | வியர்வையிற் பிறப்பவை |
| 𑌉𑌦𑍍𑌭𑌿𑌜𑍍𑌜𑌾𑌨𑌿 𑌚 | (நிலத்தைப்) பிளந்து பிறப்பவை |
| 𑌅𑌶𑍍𑌵𑌾𑌃 | குதிரைகள் |
| 𑌗𑌾𑌵𑌃 | ஆக்கள் |
| 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌃 | மனிதர்கள் |
| 𑌹𑌸𑍍𑌤𑌿𑌨𑌃 | யானைகள் |

| | |
|---|---|
| 𑌕𑌿𑌂 𑌚 | இன்னும் |
| 𑌯𑌤𑍍 | எது |
| 𑌇𑌦𑌂 | இந்த |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿 | ஜந்துவாய் |
| 𑌜𑌙𑍍𑌗𑌮𑌂 𑌚 | ஜங்கமமாய் |
| 𑌪𑌤𑌤𑍍𑌰𑌿 𑌚 | பறவையாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கின்றதோ) |
| 𑌚 | மற்றும் |
| 𑌯𑌤𑍍 | எது |
| 𑌸𑍍𑌥𑌾𑌵𑌰𑌂 | ஸ்தாவரமாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கின்றதோ) |
| 𑌤𑌤𑍍 | அது |
| 𑌸𑌰𑍍𑌵𑌂 | எல்லாம் |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑌂 | அறிவையேநேத்ரமாகவுடையதாய் |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇 | அறிவிலே |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂 | நிலைத்துளது. |
| 𑌲𑍋𑌕𑌃 | ப்ரபஞ்சம் |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌤𑍍𑌰𑌃 | அறிவையேநேத்ரமாகவுடையதாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (இருக்கின்றது.) |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾 | அறிவானது |
| 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾 | தங்குமிடமாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (உள்ளது.) |
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 | அறிவானது |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | ப்ரஹ்மமாய் |
| (𑌭𑌵𑌤𑌿) | (உள்ளது.) |

---

௫.

| | |
|---|---|
| 𑌸𑌃 | அவன் |
| 𑌏𑌤𑍇𑌨 | இந்த |

| | |
|---|---|
| 𑌪𑍍𑌰𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 | அறிவான |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌾 | ஆத்மாவாக |
| 𑌅𑌸𑍍𑌮𑌾𑌲𑍍 | இந்த |
| 𑌲𑍋𑌕𑌾𑌦𑍍 | உலகினின்றும் |
| 𑌉𑌤𑍍𑌕𑍍𑌰𑌮𑍍𑌯 | கிளம்பி |
| 𑌅𑌮𑍁𑌷𑍍𑌮𑌿𑌨𑍍 | இந்த |
| 𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑍇 | ஸ்வர்க்கமாகிய |
| 𑌲𑍋𑌕𑍇 | லோகத்திலே |
| 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍 | எல்லா |
| 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 | காமங்களையும் |
| 𑌆𑌪𑍍𑌤𑍍𑌵𑌾 | அடைந்து |
| 𑌅𑌮𑍃𑌤𑌃 | சாகாதவன் |
| 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 | ஆனான், |
| 𑌸𑌮𑌭𑌵𑌤𑍍 | ஆனான். |

---

( அத² உத்தரஶாந்தி꞉ । )

ஓம் உதி³த꞉ ஶுக்ரியம் த³தே⁴ । தத்ஸஹஸாத்ரி த³தே⁴ ।
அந்த꞉ ஸாமேஸம்விந்த்ரியம் । ஸயி ஶ்ரீஸ்ஸயி யஶ꞉ । ஸ-
வர்ச꞉ ஸவர்ணா꞉ ஸவய꞉ । உத்திஷ்டாம்யந்த ஸா ஶ்ரீ꞉ ।
உத்திஷ்டந்த ஸாஸ்ஸயந்து தே³வதா꞉ । அத³ஸ்ஸம் சக்ஷு-
ரிஷிதம் ஸந꞉ । ஸஞ்சேதா ஜ்யோதிஷாம் ஶ்ரேஷ்டா
தீக்ஷே ஸா ஸா ஹிம்ஸீ꞉ । தச்சக்ஷுர்தே³வஹிதம் ஶு-
க்ரமுச்சரத் । பஶ்யேம ஶரத³꞉ ஶதம் ஜீவேம ஶரத³꞉
ஶதம் । ஸ்வஸ்தி வ்ரதபா அஸி தே³வ ஸு ஸதே³ஷ்-
ஷ்வா । ஸ்வம் யஜுஷ்வீப்ய꞉ ।

ஓம் ஶாந்தி꞉ ஶாந்தி꞉ ஶாந்தி꞉ ॥

---

ஐதரேயஉபநிஷத்தும் ஸ்ரீசாங்கரபாஷ்யமும் முற்றுப்பெற்றன.

## மேற்கோள் முதற்குறிப்பகராதி.

# விஷய அகராதி.

பக்கம்